# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-ருஎ] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௩, புரட்டாசி Oct. '82 [பரல்-௨

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---



---


"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00



டாக்டர் நடுவர் எஸ். மகராசன் அவர்கள்

தோற்றம் : 1-4-1913

மறைவு : 9-9-1982

# மூதறிஞர் தணிகைமணி



தணிகைமணி, டாக்டர்
வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள்
நூற்றாண்டு விழா (1883 – 1982)

15.10/82


# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௭ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௩, புரட்டாசி அக்டோபர் 1982 | பரல் ௨ |
|---|---|---|


# தணிகைமணி செங்கல்வராயபிள்ளை நூற்றாண்டு விழா

திருப்புகழ்ச் செல்வரும் தேவார திருவாசகத் திருமுறை ஒளி நெறிச் செல்வருமாய சைவப் பெரியார் தணிகைமணி டாக்டர் வ சு. செங்கல்வராயபிள்ளை அவர்களின் நூற்றாண்டு விழா 15—8—82 முதல் ஓராண்டு காலம் சைவ சபைகளிலும் திருப் புகழ்ச் சபைகளிலும் சிறப்பாகக் கொண்டாடப்பெறவேண்டிய சிறப்புடைத்தாகும். சைவத்திற்கும் தமிழுக்கும் இடையறாது உழைத்து எண்பத்தெட்டு ஆண்டுகள் வாழ்ந்த அறநெறிச் செல்வரான தணிகைமணி அவர்கள் முருகப் பெருமானின் அருட் குழந்தையாகத் திகழ்ந்தவர். அருணகிரிநாதரின் அருட்சந்தக் கவிகளான திருப்புகழ்ப் பாக்களை முதன்முதல் தொகுத்துப் பதிப் பித்த வடக்குப்பட்டு தி. சுப்பிரமணியபிள்ளை அவர்களின் அருமை மைந்தராகத் தோன்றியவர் தணிகைமணி. அருட்டந்தையார் பாடல்களை அச்சில் பதித்தார்; அவர்தம் அருமை மைந்தரோ, திருப்புகழ்ச் சபை அமைத்து அப்பாடல்களை வீட்டுள் பாடி—வீதி களில் பாடி அருளிசையால் மக்கள் நெஞ்சில் பதித்தார். சேய்த் தொண்டராக இருந்த தணிகைமணியாரைச் சிவபெருமான் தம் பணிக்காகத் தடுத்தாட்கொண்டார். தம்மீது பாடப்பெற்றுள்ள திருமுறை நூல்களின் பெருமையை எடுத்துக் கூறும் பணியில் அவரை ஈடுபடுத்தினர். அதன் பயனாக ஒன்பது திருமுறைகளுக்கு ஒளிநெறி நூல்களும் ஒளிநெறிக் கட்டுரை நூல்களும் வெளிவர லாயின. எண்பது வயதை அவர் தாண்டிய நிலையிலும் இறைவன்

அவரை விடவில்லை. சிறுமணித் தேருருட்டும் சிறுவனைப்போன்று சிறு மேசையினைத் தள்ளிக்கொண்டு வீடுமுழுவதும் நடமாடிய நிலையிலும் இறைவனிட்ட பணியை இறுதிநாள் வரை செய்து முடித்தவர் தணிகைமணி. அவர் பட்டங்களைத் தேடிப் பறக்க வில்லை. பட்டங்கள் அவரைத் தேடிப் பறந்து வந்தன. பட்டம் பெற அவர் அமைச்சர் வீட்டிற்குப் படையெடுக்கவில்லை. அவர் தம் அரும் பணியைப் பார்த்து நேரில் பாராட்ட அமைச்சர் மாண்பு மிகு இரா. நெடுஞ்செழியன் அவர்கள் அவர் இல்லத்திற்கே வருகை தந்தார். தணிகைமணி அவர்கள் டாக்டர் பட்டம் பெற்று அப் பட்டத்தின் பெருமையை உயர்த்தினர். அவரால் தமிழ் வளர்ந்தது. சைவம் தழைத்தது. பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் பலர் கூடிச் செய்யவேண்டிய பணியைத் தணிகைமணியார் தனித்திருந்து செய்தார். இத்தகைய அரும்பணிகள் ஆற்றிய தணிகைமணியவர்களின் நூற்றாண்டு விழாவைத் தமிழ்மன்றங்களும் சைவசமய சபைகளும் நாடெங்கணும் கொண்டாடுதல் மிகமிக இன்றியமையாததாகும்.

**தணிகைமணி அவர்களின் வரலாறு:**

டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராயபிள்ளை அவர்கள் தென்னார்க்காடு மாவட்டம், மஞ்சக்குப்பம் என்னும் ஊரில் மாவட்ட நீதிமன்ற நடுவராயிருந்த வ. த. சுப்பிரமணியபிள்ளையும், அவர் தம் துணைவியார் தாயாரம்மாள் அவர்களும் ஆற்றிய நற்றவப் பயனால் 15—8—1883-ல் அவர்களின் நன்மகனாராகத் தோன்றினார். இவர்தம் தந்தையார் மாவட்ட நடுவராக நாமக்கல், கும்பகோணம், திருத்தருப்பூண்டி, மதுரை எனப் பல ஊர்களில பணியாற்றிய காரணத்தால் இவரது கல்விப் பயிற்சியும், அவ்வவ்வூர்களில் தொடரலாயிற்று. திருவாரூரில் பத்தாம் வகுப்புவரை பயின்றார். பின்னர்த் தஞ்சையிலும் மதுரையிலுமாகப் பயின்று 1901-ல் சென்னை வந்து கிறித்தவக் கல்லூரியில் பயின்று எம்.ஏ. பட்டம் பெற்றார். அந்நாளில் தமிழ்த்திரு. பரிதிமாற் கலைஞரும், மறைமலையடிகளாரும் இவருக்கு ஆசிரியர்களாக அமைந்து தமிழறிவூட்டினர் என்பது குறிப்பிடத்தக்கது.

1905-ல் ஆவணப் பதிவுத்துறையில் வேலைக்கமர்ந்து அத்துறையில் மேலதிகாரிகளால் பாராட்டப்பெற்றுப் படிப்படியாக உயர்ந்து, சென்னை ஆவணத்துறையில் தலைமை அதிகாரியின்

குறிப்பு:—தணிகைமணியவர்கள் வாழ்க்கை வரலாறு கழகவழி முன்னரே (1972-இல்) வெளிவந்துள்ளது.

நேர்முக உதவியாளராக (P.A. to the I.G. of Registration) அமர்வு பெற்றுர்.

இவருக்கு 1922ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் திருமணம் நடைபெற்றது. 1935-ல் இவருக்கு ராவ்சாகிப் என்னும் பட்டம் கிடைத்தது. இவர் தம் அலுவலினின்று ஓய்வு பெற்றபின் திருத்தலங்கள்தோறும் சென்று வருதலேயும், நாடோறும் திருப்புகழ், கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், வேல் வகுப்பு ஆகிய சமய நூல்களேயும், கல்லாடம், பரிபாடல், குறுந்தொகை ஆகிய சங்க நூல்களேயும் மனப்பாடம் செய்தலேயும் மேற்கொண்டார்.

இவர் ஆவணப் பதிவுத் துறையில் பணியாற்றியபோது பதிவு முறைகளில் காணப்பட்ட பல்வேறு பிரிவுகளேயும், அவை பற்றிய விளக்கக் குறிப்புகளேயும் கண்டபோது தாம் பல்லாண்டுகளாக ஈடுபாடு கொண்டிருக்கும் திருமுறைகளுக்கு இப்படியொரு விளக்க நூலே எழுதிஞல் நலமென்று கருதிஞர். அதன் விளேவாகத் தோன்றியனவே அவர்தம் ஒளிநெறி நூல்களும், ஒளிநெறிக் கட்டுரைகளுமாகும். அவ்வகையில் அவர் இயற்றிய நூல்கள்:

தேவார ஒளிநெறி (மூன்று பகுதிகள்), திருவாசக ஒளிநெறி, திருவாசக ஒளிநெறிக் கட்டுரை, திருக்கோவையார் ஒளிநெறிக் கட்டுரை, திருக்கோவையார் ஒளிநெறி, தேவார ஒளிநெறிக் கட்டுரை மற்றும் திருப்புகழுக்கு உரை முதலியன. தணிகைமணி அவர்களின் இத்தகைய அரிய இலக்கியப் பணியினேக் கண்ட கழக ஆட்சியாளர், தாமரைச் செல்வர் வ. சுப்பையாபிள்ளே அவர்கள், இவருக்குத் தமிழகப் பல்கலேக் கழகங்களுள் ஏதேனும் ஒன்றின்வழி டாக்டர் பட்டம் வழங்கச் செய்தல் வேண்டும் என எண்ணி, அதற்கான முயற்சிகளே மேற்கொண்டனர். அதன் விளேவாக மதுரைக் காமராசர் பல்கலேக் கழகத்தில் 1—9—69ல் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கப்பெற்றது. இப் பட்டமளிப்பு விழாபற்றிய செய்திகள் செல்வி சிலம்பு 44. பரல் 1ல் விவரமாக வெளிவந்துள்ளன.

தணிகைமணி அவர்கள் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் ஆராய்ச்சியிலே, அதிலும் சிறப்பாகச் சமய நூல்களே ஆராய்வதில் பேரீடுபாடு கொண்டிருந்தார்கள். இங்ஙனம் வாழ்வாங்கு வாழ்ந்த இப்பெரியார் 1971ஆம் ஆண்டு ஆகஃச்டுத் திங்கள் 25-ஆம் நாள் இறையடி சேர்ந்தார். அவரது நூற்றுண்டு விழாவினேத் தமிழ்நன்மக்கள் சமய அன்பர்கள் சீருஞ் சிறப்புமாகக் கொண்டாடி அவர்தம் புகழ் பரப்புவார்களாக.

———

# காரி

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

காரி என்னும் வள்ளலின் புகழ் நாடறிந்தது. அவன் புகழ் பரப்பும் பாடல்கள், சங்கச் சான்ருேரால் பாடப்பெற்ற பாட்டு தொகைகளில் உண்டு. அவன் புகழ் விளக்கும் ஊர்களும் பல உள்ளன.

காரி என்னும் பெயர் இவ் வள்ளல் காலத்தும், இவனுக்குப் பின்னரும் பயில வழங்குகின்றன. காரி கிழார், காரிக் கண்ணனுர் சங்கச் சான்ருேர். காரியாசான் சிறுபஞ்ச மூலத்தின் ஆசிரியர். காரி மாறனுர் நம்மாழ்வார்; காரி நாயனுர் அறுபான் மூவருள் ஒருவர்; காரி ஆறும், காரி நாடும் பண்டு விளங்கின.

கர், கரு, கார், கால், காள், காழ் இவற்றின் வழியாகப் பிறந்த சொற்கள் நூற்றுக்கணக்கில் உள. தமிழ்ச்சொற் பரப்பைக் காட்டும் மூலங்களுள் 'கர்' என்பதும் குறிப்பிடத்தக்கது. இவையெல்லாம் 'கருமை' என்னும் பொருள் வழியே வருதல் விளங்கும்.

'காரி' என்னும் பெயரின் மூலம் 'கார்' என்பதே. கார் என்பது கருமையாய், கருமுகிலாய், மழையாய், மழைக் காலமாய், மழைக்கால விளை பயிராய், விளை பயிரின் பயனுய்ப் படிப்படியே பொருளால் விரிந்து தமிழ் வளத்தைக் காட்டுகின்றமை அறிந்து மகிழத்தக்கது!

காரி கரு நிறத்தால் பெயர் பெற்ருனு? அவன் கரியன் ஆயினும் ஆகலாம்; செய்யன் ஆயினும் ஆகலாம்! அவை, அவன புகழுக்குரியவை அல்ல. வண்ணத்தைக் கொண்டு பெயரமைதல் வழக்கே. ஆனுல் அவ் வண்ணப்பெயர் மறுதலையாகப் பொருள் தருவதும் வழக்கே! 'வெள்ளையப்பன்' 'கறுப்பையா'வாக இருப்பது இல்லையா? 'கறுப்பாயி' 'சிவப்பாயி'யாக இருப்பது இல்லையா?

காரியின் நிறத்தைப்பற்றிய குறிப்பு அறியக்கூடவில்லை. அவன் வண்மையும் வன்மையும் செம்மையும் சீர்மையும் அவனைப் பற்றிய பாடல்களால் அறிய வருகின்றன.

காரி மலையமானுட்டின் மன்னன்; அவன் முள்ளூர் மலைக்குரியவன்; அவன் தலை நகர் 'கோவல்' என்னும் திருக்கோவலூர்! அவனெரு குறுநில மன்னன்! மூவேந்தருக்கும் உற்றுழி உதவும் உரவோன்!

அவன், கழல்தொடிக் காரி, கழல் புனை திருந்தடிக் காரி, கழல்தொடி தடக்கைக் காரி, நெடுந்தேர்க் காரி, ஒள்வேல்

மலையன், செவ்வேல் மலையன், மாரியீகை மறப்போர் மலையன், தேர்வண் மலையன், கோவல் கோமான் என்றெல்லாம் பாராட்டப் பெற்றவன்.

காரியின் குதிரை புகழ் வாய்ந்தது. அது கரு நிறமானது. 'காரிக் குதிரை' என்று வழங்கப்பெற்றது. காரிக் குதிரையால் காரியும், காரியால் காரிக் குதிரையும் சான்றோர்களால் பாடும் புகழ் பெற்றனர். 'காரிக் குதிரைக் காரி!' என்று தன் ஊர்தியால் பெயர் பெற்ற பேற்றுளன் காரி! 'காரிக் காளை' என்று இந் நாள் வழங்கப்பெறுவது இல்லையா!

காரி என்னும் பெயர், முள்ளூர் மன்னன், கோவல் கோமான், தேர்வண் மலையனுக்கு எப்படி வாய்த்தது? காரி என்னும் சொல்லின் பொருளையும் இம் மன்னன் தனித் தன்மையையும் அறியின் புலப்படும்!

காரியின் நாட்டைக், கடலும் கொள்ளாதாம்; பகைவரும் பற்றிக்கொள்ள நினையாராம்; அவன் வலிமை அத் தகைத்து (புறம். 122).

மூவேந்தருள் எவனேனும் ஒருவன், 'எனக்குப் போர்த் துணையாக வரவேண்டும்' என்று முந்தி வந்து, காரியை வேண்டித் துணையாக்கிக் கொள்வான். (புறம். 122).

யானையும் அரசும் களத்தில் படப் பகையழிக்கும் வல்லாளன் காரி. (புறம். 126).

இவை, காரியின் வீர மாண்புகள். இவை பிறர்க்கும் உரியவை எனலாம். ஆனால் காரியின் 'தனி வீறு' ஒன்று. அது, வெற்றி பெற்றவனும் புகழ்வானும் காரியை; தோல்வியுற்றவனும் புகழ்வானும் காரியை!

'எனக்குத் துணையாக வந்து வெற்றி வாய்ப்பைத் தந்தவன் நீயே' என்று வென்றவன் புகழ்வான்! 'எனக்குத் துணையாக வாராமையால் யான் தோல்வி கண்டேன்' என்று தோற்றவன் புகழ்வான்! காரிக்கு இரு பால் புகழும் உண்டு!

''கடந்தட்டு வென்றோனு நிற்கூ றும்மே,
வெலீஇயோன் இவனென''

''தோற்றோன் தானுநிற் கூறும்மே தொலைஇயோன் இவனென''

வென்றவனும் தோற்றவனும் ஒருங்கே புகழ வாய்க்கும் பேறும் வீறும் பொதுவாக எவருக்கும் வாய்ப்பனவோ? ஆகலின், இப் பெருமிதத்தைக் கூறும் பெருஞ் சாத்தனார், 'ஒரு நீயாயினை பெரும!' என வியந்தார். (புறம். 125).

காரியின் ஒருதானுய வீறே அவனுக்குக் காரிப் பெயரைத் தந்ததாம்.

காரி என்பதொரு புள் ; கரும்புள், கரும்பிள்ளை என்பனவும் அது. கரிக்குருவி, கரிச்சான் என்பனவும் அது. வலியன், வல்லூறு, வலுசாறு என்பனவும் அதுவே. வலியன், 'வயன்' என இலக்கியத்தில் இடமும் பெறும்! காரி எவ்வாறு ஒரு தானைய வீரன் எனச் சாத்தனார் குறிக்கின்றாரோ, அது போலவே 'புள்' என்றாலே கரும்புள்ளாய காரிக் குருவியையே குறிக்கும். அக் குறிப்பு இக் காரியைப்பற்றிக் கபிலர் பாடும் பாட்டிலேயும் இடம் பெற்றுள்ளது. 'நாளன்று போகிப் புள்ளிடை தட்ப' என்றார் அவர்.

பறவையின் வேந்தென வளையமிடுவது 'அரசாளிப்' பறவை. அவ்வரசாளியை ஆட்டி வைப்பது காரிப் பறவையாம் கரிச்சான்! உடலால் சிறியது ; உரத்தால் அரியது ; ஆதலால் பெரியவையும் அறைபட்டு அலறும்! அஞ்சி ஓடும். இக் காட்சியை நாம் கண்டது இல்லையோ ?

வலிய காரிப் பறவை மிகப் பழங்காலந் தொட்டே சொகினம் (சகுனம்) காட்டும் பறவையென்னும் குறிப்புண்டு. அது தடுத்தால் தோல்வி என்றும், வழிவிட்டால் வெற்றி யென்றும் வீரர்கள் குறிக்கொண்டனர். 'புலரி விடியல் புள்ளோர்த்துக் கழிமின்' என்பது மலைபடுகடாம். 'நாளும் புள்ளும் கேளா ஊக்கம்' என்பது தகடூர் யாத்திரை.

"வால் நீண்ட கரிக்குருவி வலமிருந்து இடம்போனால்
கால் நடையாய்ப் போனவர்கள் கனகதண்டி ஏறுவார்கள்"

என்பது இன்றும் வழங்கும் பழமொழி.

காரிக் குருவி சொகினம் காட்டாது தடுத்தால், எத்தகைய வீரனுக்கும் தோல்வியே ஏற்படும்! அது சொகினம் காட்டின் வெற்றி உறுதியாகக் கிட்டும்! *வெற்றிக்கும் தோல்விக்கும் காரிக் குருவியின் குறிப்பே அடிப்படை! அதுபோல் மூவேந்தர் வெற்றிக்கும் தோல்விக்கும் காரியே மூலவன். இக் கருத்தாலேயே கோவற் கோமான் முள்ளூர்மன்னன், தேர்வண் மலையன் 'காரி' ஆனான்.

வென்றோர் 'வெலீஇயோன் இவன்' எனவும், தோற்றோர் 'தொலைஇயோன் இவன்' எனவும் கூறிக் கூறிப் புகழ் விளக்க மாகிய பின்னர்க் காரிப் பெயர் பெற்றான் என்றும், அப் பெயரே அவன் பெயர்கள் அனைத்தையும் வென்று விளக்கமும் வீறும் கொண்டு இலங்குகின்றதென்றும் கொள்ளலாம்!

———

*"பொய்யாது புள் மொழிந்தார்க்கு
வையாது வழக்குரைத் தன்று" (புறப்பொருள் வெண்பாமாலை 18)

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(முன்னிதழ், உகஆம் பக்கத் தொடர்ச்சி)

திருக்குற்றாலத்தில் திரிகூட நாதர் பவனி காணப் பெண்கள் காமன்றன் படைகள் போல் வந்தார். மன்மதனுடைய வில் கரும்பு; கணைகள் மலர்கள்; ஊர்ந்து வரும் தேர் தென்றல்.

பாலேறும் விடையில்வருந் திரிகூடப் பெருமானார் பவனி காணக்
காலேறுங் காமனுக்காக் கையேறும் படைப்
பவுஞ்சாய்க் கன்னிமார்கள்
சேலேறுங் கலகவிழிக் கணைதிட்டிப் புருவநெடுஞ்
சிலைகள் கோட்டி
மாலேறப் பொருதுமென்று மணிச்சிலம்பு முரசறைய வருகின்றாரே.

[பாலேறும் - வெண்ணிற மிகும்; கால் - தென்றற்காற்று; படை - ஆயுதங்களையுடைய; பவுஞ்சு - சேனை; சிலை - வில்; கோட்டி - வளைத்து; பொருதும் - போர் செய்வோம்; சிலம்பு - பாதசரம் - காலிலணியும் அணி; முரசு அறைய - முரசு இன்னியம் போல் முழங்க.]

கெண்டை விழிப் பெண்கள் அக் கண்கள் என்ற கணைகளினால் புருவமாகிய வில்லை வளைத்து ஆண் என்ற எதிரி மயக்கமுறப் போர் செய்வோமென்று காற்சிலம்பு முரசறைய வருகின்றார். அம் மாதர்அணித் தலைவியாகிய வசந்தவல்லியோ காமனையே 'நீ யாவன் என்முன்?' என்று தன் கண் பார்வையாலேயே மிரட்டுகின்றாள். பொன்னணித் திலதந் தீட்டிப் பூமலர் மாலை சூட்டி வன்ன மோகினிப் பெண் போல் வசந்த மோகினி வந்தாள்.

வங்காரப் பூஷணம் பூட்டித் திலதந்தீட்டி
மாரனைக் கண்ணாலே மருட்டிச்
சிங்கார மோகனப் பெண்ணாள் வசந்தவல்லி
தெய்வரம்பை போலவே வந்தாள்.

(வங்காரம் - செப்பம்; ஒழுங்குற்ற)

மாரனையே திணறடிக்கும் பெண்முன் ஏனையோர் நிலை என்ன? அப் பெண்முன் தலைவனைக் குறையிரக்கச் செய்வான் மாரன்.

பாண்டித்துரைத் தேவரின் ஒன்பதாவது காவடிச் சிந்து 'தலைவன் றலைவிபாற் குறையிரந்து நிற்ற'லை உரைக்கிறது. 'என்னுடைய நிலை உனக்குத் தெரியுமா?' என்று தலைவியிடம் முறையிடுகிறான் சிவஞானபுரத்து வேலன். 'மதவேளின் கணை களுக்கு நானாளானேன்', என்று குமரவேள் உரைக்கிறான்.

வண்ணக்கருங் குழலாளே எழிலாளே மதவேளே—பொழி
வாளிகளுக்குநா னுளே ஆகி
மன நொந்திடல் தவிரும்படி முனம்வந்தெனை யருள்கொண்டணை
வாடியடி யுன்னிரு தாளே தஞ்ச
மாயடை வேனிந்த நாளே.

தலைவியின் தலையலங்காரம் தலைவனை மலைக்க வைக்கிறது. தலைவி யின் 'சொருகு கொந்தளகம்' மட்டுந்தானா தலைவனை ஈர்க்கிறது? அவளுக்கேயுரிய எழிலும் தலைவனை மயக்குகிறது.

இருண்ட மேகஞ்சுற்றிச் சுருண்டு சுழியெறியுங்
கொண்டையாள்.

அன்பு கூர்ந்து தன்னை வந்தடையும்படி தலைவன் வேண்டு கிறான். 'நீயே புகல்' எனவும் மொழிகின்றான்.

சிந்தின் தொடக்க அடிகளில் ஆசிரியர் கையாளும் தேற்றே காரங்கள் ஈற்றெதுகைகளுடன் காதல் வயப்பட்ட தலைவன் மன நிலையைத் தெற்றெனச் செப்புகின்றன. 'குழலாளே, எழிலாளே' என்ற விளிகளும், 'மதன்கணைக்கு நானுளே' என்ற செய்தியும் உன்னிரு தாளே இந்த நாளே 'தஞ்சம்' என்று அடைக்கலம் கோரும் குரலும் ஓசை நயத்துடன் செவிக்கின்பம் தருவதாயும் உள்ளன.

'கிளியே நனி களிவா' என்ற தலைவனுரை கேளாத செவி யிருக்க அவள் நெஞ்சு உருகுவது எவ்வாறு? "இப்போது இந்த வாது செய்வதேது?" எனத் தலைவன் கேட்கின்றான். கிளியென மிழற்றும் தலைவியின் கிளவி வள்ளத்திலே நிறை பாலும் தேனும் போலும் சுவை சாலும் மொழி. அவள் இன் மொழி பாலொடு தேன் கலந்தற்றே. 'வானத்தை வில்லாய் வளை, மணலைக் கயிருகத் திரி' என்றாலும் 'நீ விரும்பின் நான் அதைச் செய்ய இயலும்' என்று பொருள் படும்படி தலைவன் பேசுகிறான்.

"கடி மலருங் கொடு
வாவென்றே பகர்ந் தாலும் கொண்டு
மேவுவன் சொல்லுமுன் னாலும்"

என, எள் என்று சொல்லுமுன் எண்ணெயாய் நிற்கப் போவ தாகத் தலைவன் உறுதிமொழி சொல்கிருன்.

'நன்றி, நட்பு, உறவு என்பவை என்பால் இல்லாத நீ என்னை எள்ளி நகையாடுகிருய். மாரன்கணை எய்திடிலோ மோசம். உனக்கு இவ்வுபதேசம் செய்தவர் யாரோ?' எனவும் தலைவன் வினவினுன். 'பூவையே உன் விழி நஞ்சம் என் நெஞ் சத்துக்கு மிக வஞ்சம். எனினும் தஞ்சம் நீ தானே!' என்கிருன் தலைவன்.

''பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து.''

இன்னுமொரு குறளையும் சான்று காட்டலாம்.

''இருநோக் கிவளுண்கண் ணுள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன் றந்நோய் மருந்து.''

தலைவியின் ஊடலைத் தவிர்க்கத் தலைவன் என்ன பாடு படுகிருன்?

''குத்துவிளக்கெரியக் கோட்டுக்காற் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனம்''

தலைவனை உறுத்துகிறது. செங்கதிர் போல் இந்து மேவி அழல் தூவி வாட்டுகின்ருன். 'அடிபாவி, உருகலையா மனம்? அதென்ன இரும்போ கல்லோ? இதுவோர் பழியல்லோ' என்று தலைவன் நெஞ்சை அழுத்தும் சுமையை இறக்குகின்ருன்.

வண்ணக்கருங் குழலாளே எழிலாளே மதவேளே—பொழி
வாளிகளுக்குநா னுளே ஆகி
மனநொந்திடல் தவிரும்படி முனம்வந்தெனை யருள்கொண்டணை
வாடியடி யுன்னிரு தாளே தஞ்ச
மாயடை வேனிந்த நாளே.

கிண்ணத்தனத் தாயிப்போது இந்தவாது செய்வதேது—என்பாற்
கிஞ்சித்தும் நெஞ்சுரு காது பசுங்
கிளியேஎனி களிவாவென எளியேனிடம் ஒளியாதுரை
கெஞ்சிடு மென்சொலுன் காதுகளில்
கேட்கவில்லை யோசற் ருேது.

வள்ளத்திலேநிறை பாலும் தேனும்போலும் சுவைசாலும்—மொழி
மாதேநீ யேதெண்ணி னுலும் உன்றன்

மனத்தின்படி புரிவன்பல பணியுங்கடி மலநங்கொடு
வாவெனவே பகர்ந் தாலும் கொண்டு
மேவுவன் சொல்லுமுன் ஞலும்.

எள்ளத்தனையும் விஸ்வாசம் மனநேசம் என்மேற் பாசம்—இல்லா
தேன்செய்கிருய் பரிகாசம் இனி
இலகும்பல மலரம்புகள் கலகம்புரி மகனுஞ்சிறி
தெய்திடிலோபெரு மோசம் பெண்ணே
செய்ததாரிவ்வுப தேசம்.

பூவையேயுன்விழி நஞ்சம் மிகவஞ்சம் செய் தெனெஞ்சம்—தனிற்
புக்கது வேறில்லை தஞ்சம்—உன்றன்
புதுநற்கனி யிதழ்வைத்திடு மதுவைச்சிறி துதவிற் பல
புண்ணியமாமடி கொஞ்சம் வந்து
நண்ணிடுவாய் சப்ர மஞ்சம்.

பாவையன்ஞயுன தோதி தனைக்கோதி மலர்ஜாதி—முல்லை
பாதிரி சண்பக மாதி சூட்டிப்
பாரச்செழு முலேமேலணி யாரக்கல வைபினுனினி
பாவித் தெழுவேன் தொய்யிலே எனை
மேவிக் கலந்தணை தையலே

செங்கதிர் போலிந்து மேவி தழல்தூவி யெனதாவி—வாட்டு
தேயென் செய்வேனடி பாவி உன்றன்
சித்தத்தருள் வைத்தித்தரு ணத்தொத்தொரு முத்தத்தையென்
சிந்தைமகிழ்ந்திடத் தாராய் பெண்ணே
வந்தென் விரகத்தைத் தீராய்.

மங்கைப் பருவங்கொள் வஞ்சியே அபரஞ்சியே மயல்மிஞ்சியே—கோடி
வந்தனஞ் செய்கிறேன் கெஞ்சியே—ஒளிர்
மலையாயிரு முலையாயருளிலையாவுரு கலையாமனம்
வல்விரும் போகருங் கல்லோ பெண்ணே
சொல்லிது வோர்பழி யல்லோ.

இந்தச் சிந்தின் சந்தமும் கையாண்ட எதுகை மோனைகளும் சொல்லாட்சியும் கற்ருரை மட்டுமன்றி மற்ருரையும் மகிழ்விக்கும்.

(தொடரும்)

———

# கொக்கராயன் பேட்டை சிவன் கோயில்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுப் பதிவாளர் (ஓய்வு)
23, கல்யாண்ஜி வீதி, பொள்ளாச்சி.]

"கொந்தணவும் பொழில் சூழ் கொடிமாடச் செங்குன்றூர்"

எனவும்,

"குன்றன மாளிகைசூழ் கொடிமாடச் செங்குன்றூர்"

எனவும் முத்தமிழ் விரகராம் திருஞான சம்பந்தப் பெருமானால் பாடப்பெற்ற பேறு பெற்றதும்,

"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்"

என இறைவன் உறையும் திருத்தலங்களில் ஒன்றென இளங்கோ வடிகள் தமது சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பெற்றதுமான திருச்செங்கோட்டினின்றும் ஏறத்தாழ 16 கி. மீ. தொலைவில் கொக்கராயன் பேட்டை என்ற சிற்றூர் உள்ளது.

இங்குள்ள கோயில் கிழக்கு நோக்கி உள்ளது. இறைவனது கோயில் உபானம், முப்பட்டைக் குமுதம், வரி, வரிமானம் ஆகியவை கூடிய அதிட்டானத்தைக் கொண்டது. முன்பக்கம் நீங்கலாக ஏனைய மூன்று பக்கங்களிலும் கல்லில் கதவு அமைக்கப்பட்டுள்ளது. கதவின் இரு புறங்களிலும் கலசம், தாமரை, பலகை ஆகியவை கொண்ட நான்கு அரைத்தூண்கள் உள்ளன. கதவின் மேல் இரண்டு கூடுகள் கொண்ட கபோதம், அதற்கு மேல் மூன்று கூடங்கள், அதற்கு மேல் மூன்று கூடுகள் கொண்ட கபோதம் காணப்படுகின்றன. அரைத்தூண்கள் மற்றும் மூன்று கூடுகள் கொண்ட கபோதத்தின் மேல் தாமரை இதழ் போன்ற அமைப்பும், அதற்கு மேல் ஆறு கூடுகள் கொண்ட கபோதமும், அதற்கு மேல் யாளி வரிசையும் அமைக்கப்பட்டுள்ளன. யாளி வரிசை வரை கல்லால் கட்டப்பட்டுள்ளது. அதற்கு மேல் உள்ள விமானம் செங்கல்லால் கட்டப்பெற்றதாம்.

விமானம் மூன்று தளங்கள் கொண்டது. முதல் தளத்தில் நான்கு கூடங்களும் ஒரு சாலையும், இரண்டாவது தளத்தில் இரண்டு கூடங்களும் ஒரு சாலையும், மேல்தளத்தில் ஒரு சாலையும் நான்கு புறமும் மாலை போன்று உள்ளது. விமானத்தின் சிகரம் சதுர அமைப்பினைக் கொண்டது. அதற்கு மேலே ஸ்தூபி காணப்படு

கிறது. விமானத்தின் கூடங்கள் மற்றும் சாலைகளில் உள்ள உருவங்களில் சில சிதைந்து உள்ளன. தென்புறத்தில் அடித் தளம் மற்றும் மேல்தளத்தில் உள்ள சாலைகளில் சிவனின் ஆலமர் செல்வன் வடிவங்களும், இடையில் உள்ள சாலையில் திருமாலின் வடிவமும் அமைக்கப்பட்டுள்ளன. மேலே உள்ள சிங்கக் கூட்டின் நடுவில் இளநங்கை ஒருத்தி உட்கார்ந்து வணங்கும் நிலையில் காணப்படுகிறாள். வடபுறம் முதல்தளத்தில் உள்ள சாலையில் நான்முகன் உருவமும், அதனை அடுத்தாற்போன்று ஆடவல் லானின் ஊர்த்தவ நடனவடிவமும் உள்ளன. மேல்தளத்தின் நான்கு மூலைகளிலும் அண்ணலின் ஊர்தியாம் காளை காணப்படு கிறது. காளைக்கு இரு உடலும் ஒரு தலையும் அமைக்கப்பட்டு, இரு புறத்தினின்று நோக்கினும் காளை படுத்து இருப்பதுபோன்று உள்ளது.

கருவறையின் உள்ளே இலிங்கத்திருவுரு உள்ளது. இவ் விறைவன் திருப்பெயர் பிரமலிங்கேசுவரர் என்பதாம். ஒருகால் நான்முகனால் வழிபடப்பெற்றமையால் இப்பெயர் ஏற்பட்டிருக் கலாம். கருவறையை ஒட்டி அர்த்தமண்டபமும் அதனை அடுத்து மகாமண்டபமும் உள்ளன. இவை பிற்காலத்தைச் சேர்ந்தவை யாம். கோயிலின் முன்பு நந்தியின் திருவுருவமும் அதனை அடுத்துப் பலிபீடமும் அமைக்கப்பட்டுள்ளன. தென்புறம் ஆலமர் செல்வனின் உடைந்த வடிவம் காணப்படுகிறது. இறைவனது கோயிலுக்கு இடப் பக்கத்தில் இறைவியின் கோயில் உள்ளது. இறைவியின் திருப்பெயர் சௌந்தரநாயகி என்பதாம். இவற்றைச் சுற்றி இடிந்த நிலையில் திருச்சுற்று காணப்படுகிறது.

திருச்சுற்று வாயிலை அடுத்து வலப்பக்கத்தில் சூரியனின் சிற்றாலயம் உள்ளது. இறைவனது கோயிலுக்குத் தென் புறத்தில் கண்ணனும், அனுமாரும், மேல் புறத்தில் முருகனும் உள்ளனர். இறைவன் மற்றும் இறைவி ஆகியோரின் கோயில்களுக்கு இடை யில் சண்டிகேசுவரரும், வைரவரும் காணப்படுகின்றனர்.

புல்லாங்குழல் இசைக்கும் நிலையில் உள்ள கண்ணனது வலக்கால் ஆகம விதிகளின்படி இடக்கால் முன் மடித்து இருக்க, விரல்கள் பூமியைத் தொடும்படி அமைக்கப்பட்டுள்ளன. முன் இரு கைகளில் புல்லாங்குழலை ஏந்தியுள்ளான். ஆகமங்களில் வேணுகோபாலன் அல்லது கான கோபாலனுக்கு இரு கைகள் தாம் சொல்லி இருக்க, இங்கு நான்கு கைகள் உள்ளன. பின் வலக்கையில் சங்கும், பின் இடக் கையில் சக்கரமும் உள்ளன. கண்ணனின் இருமருங்கிலும் சத்யபாமாவும், உருக்குமணியும் உள்ளனர். அவனது வலக்காலைக் காளை ஒன்று நாக்கால்

தடவிக்கொண்டு இருக்கிறது. அவனது வடிவம் கண்ணைக் கவரும் கைவண்ணத்துடன் உருவாக்கப்பட்டிருப்பது கண்டு இன்புறத்தக்கதாம்.

அடுத்து, காணவேண்டியது வைரவரது திருவுருவம். வைரவரை நான்கு கைகளுடனும் தமது ஊர்தியாம் நாயுடனும் சிவன் கோயில்களில் காணலாம். அச்சத்தை விளைவிக்க அவரது தலையைச் சுற்றிலும் தீப் பிழம்புகளும், வாயில் கோரைப் பற்களும் அமைக்கப்பட்டிருக்கும். ஆகமங்களில் 64 வகை வைரவர்கள் கூறப்பட்டுள்ளனர். இங்குள்ள திருவுருவிற்கு எட்டு கைகள் உள்ளதால், இவரை வடுக வைரவர் என ஆகமங்கள் சொல் லும். தலையைச் சுற்றிலும் தீப்பிழம்புகளும், ஒரு புறத்தில் முற்று வெண்திங்களும் காணப்படுகின்றன. ஏனைய வடிவங் களில் உள்ளது போன்று இவரது ஊர்தியாம் நாய் இங்கு இல்லை. இவரது வாயில் கோரைப் பற்களும் இல்லை. முகத்தில் அமைதி நிலவுகிறது. ஆடை ஏதும் இன்றிக் காணப்படும் இவரது இடுப்பில் பாம்பு கடிபந்தம் என்ற அணிகலனாக உள்ளது. மார்பில் பாம்பு முப்புரி நூலாகவும், மண்டையோடுகள் மாலையாக வும் அணியப்பட்டுள்ளன. வலக்கைகளில் மழு, சூலம், கத்தி, பாம்பு இருக்க, இடக்கைகளில் சூலர், பாசம், மண்டையோடு, கேடயம் உள்ளன. இறைவனது இடப்பாகம் பெண் என்பதற்கு ஏற்ப, இடக் காதில் பெண்கள் அணியும் தோடு உருவாக்கப் பட்டுள்ளது.

சிவனுடைய திருவுருவங்களில் பிச்சை உகக்கும் பெம்மான் மற்றும் வைரவர் ஆகிய இரு வடிவங்கள் ஆடை ஏதுமின்றி அமைக்கப்பெறும். பிச்சை உகக்கும் பெம்மானின் திருவுருவிற்கு வலப்புறத்தில் மானும், இடப்புறத்தில் பிச்சை இடுவதை ஏற்கப் பாத்திரத்தைத் தலையில் வைத்துள்ள பூதமும் இருக்க வேண்டும். அவை இரண்டும் இங்கு இல்லை. பிச்சை உக்க்கும் பெம்மானுக்கு நான்கு கைகள்தாம் சொல்லப்பட்டுள்ளதே அன்றி எட்டு கைகள் ஆகமங்களில் கூறப்படவில்லை. மேலும் திருச் சுற்றில் உள்ள சிற்றாலயத்தில் வைரவரைத்தான் அமைப்பது வழக்கம். எனவே இத்திருவுருவம் வைரவராம்.

சோழர்கள் காலத்துக் கோயில்களில் செந்தமிழ் நாட்டுப் பொற்காலச் சிற்பி மாமன்னன் இராசராசன் காலம்வரை சிவனது கோயிலைச் சுற்றி எட்டு சிற்றாலயங்கள் அமைப்பது வழக்கம். அங்கு எழுந்தருளி இருக்கும் தெய்வங்கள் எட்டு சுற்றுப் புறத் தெய்வங்கள் (அட்ட பரிவாரத் தெய்வங்கள்) எனப்பட்டன. அவை: விநாயகர், முருகன், சூரியன், சந்திரன், சண்டி கேசுவரர், வைரவர், சப்தமாதர் மற்றும் சேட்டை. இங்கு

இறைவனது கோயிலைச் சுற்றி ஆறு சிற்றாலயங்கள் மட்டும் காணப்படுகின்றன. ஏனைய இரண்டும் சிதைந்து போயிருக்க வேண்டும். தற்போது உள்ள சிற்றாலயங்களில் எட்டு சுற்றுப்புறத் தெய்வங்களில் முருகன், சண்டிகேசுவரர், வைரவர் மற்றும் சூரியன் ஆகிய நால்வரும், நான்கு சிற்றாலயங்களில் உள்ளனர். ஏனைய இரண்டில் கண்ணனும், அனுமாரும் அமைக்கப்பட்டுள்ளனர். ஆகம நூல்களில் சுற்றுப்புறத் தெய்வங்களாகக் கண்ணனும், அனுமாரும் கூறப்படவில்லை. அனுமார் இராமனின் தொண்டர். எனவே கண்ணன் மற்றும் அனுமாரின் வடிவங்கள் பிற்காலத்தில் கொண்டுவந்து வைக்கப்பட்டிருக்க வேண்டும். விநாயகரின் திருவுரு நந்திக்கு அருகிலும், சப்தமாதர்களின் வடிவங்கள் முருகன் திருமுன்பு சிதைந்த நிலையிலும் காணப்படுகின்றன. சந்திரன் மற்றும் சேட்டை ஆகியோரின் திருவுருவங்கள் காணப்படவில்லை.

கருவறைச் சுவரின் வெளிப்புறத்தில் யாளி வரிசை அமைப்பது சோழர்களின் கோயில் கட்டிடக் கலையைச் சார்ந்ததாம். "9 மற்றும் 10ஆம் நூற்றாண்டுகளில் கட்டப்பெற்ற பல்லவர்கள் மற்றும் சோழர்களின் கோயில்களில் உள்ள கருவறையின் வெளிப்புறத்தில் அரைத் தூண்கள் அமைக்கப்பட்டிருக்கும். தெய்வத் திருவுருவங்களுடன் கூடிய புரைகள் இருக்கமாட்டா" என, திரு எஸ். ஆர். பாலசுப்ரமணியம் அவர்கள் தமது "முற்காலச் சோழர்களின் கலை" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இங்குள்ள கருவறையின் வெளிப்புறத்தில் யாளி வரிசையும், அரைத் தூண்களும் காணப்படுகின்றன; தெய்வத் திருவுருவங்கள் கொண்ட புரைகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. பல்லவர்களது ஆட்சி கொங்குநாட்டில் பரவவில்லை என்பது வரலாறு. சோழ மன்னன் முதலாம் ஆதித்தன் கொங்கு நாட்டை வென்றதாக வரலாறு கூறுகிறது. இதை நம்பியாண்டார் நம்பிகள் தமது திருத்தொண்டர் திருவந்தாதியில்,

"சிற்றம்பல முகடு கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன்"

எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும் சோழர்களின் கோயில்களில் தான் திருச்சுற்றில் எட்டு சிற்றாலயங்களை அமைக்கும் வழக்கம் இருந்தது. இம்முறை காவிரி தந்த கலைச் செல்வன் மாமன்னன் இராசராசன் காலம் வரை இருந்து வந்தது. இங்கு இறைவிக்கென்று தனியாகக் கோயில் உள்ளது குறிப்பிட வேண்டிய ஒன்றாகும். கங்கையும் கடாரமும் கொண்ட இராசேந்திர சோழன் காலம் வரை இறைவிக்கென்று தனியாகக் கோயில் இல்லை என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிந்த முடிபாகும். எனவே இறைவியின் கோயில் பிற்காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும்

முதலாம் ஆதித்தன் கி. பி. 871 முதல் 907 வரை ஆட்சி புரிந்தான். மாமன்னன் இராசராசனது ஆட்சிக் காலம் கி. பி. 985 முதல் 1014 வரையாகும். இவ்வாருகக் கோயில் கட்டிட அமைப்பு மற்றும் வரலாறு ஆகியவற்றை நோக்கும்போது இந்தக் கோயிலின் காலத்தை 10ஆம் நூற்ருண்டாகக் கொள்ள வேண்டியுள்ளது.

கோயில் கட்டிடக் கலைக் கண்ணேட்டத்தில் நோக்கும்போது இந்தக் கோயில் சேலம் மாவட்டத்தில் மிகவும் தொன்மையான ஒன்ருகும். ஆனுல் இன்று யாரும் கவனிப்பாரின்றி உள்ளது. திருச்சுற்று எங்கும் புல்லும் முள்ளும் முளைத்துக் காணப்படுகின்றன. திருச்சுற்று மதிலில் உள்ள இடிபாடுகளின் வழியாகக் கால் நடைகள் தடை ஏதுமின்றி உட்புகுந்து மேய்ந்து கொண்டிருக்கின்றன. தமிழகப் பொற்காலமான சோழப் பேரரசின் ஆட்சிக் காலத்தின் கலைச் செல்வம் ஒன்றின் இன்றைய அவல நிலையைக் காண மனம் புண்படுகிறது.

"நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவும் அற்றவர் வாய்ச்சொல் அருளீர்
ஆண்மையாளர் உழைப்பினை நல்கிர்
.............................................
எதுவும் நல்கி இங்கு எவ்வகையானும்
இப்பெருந் தொழில் நாட்டுவம் வாரீர்"

என்று மாகவி பாரதியார் அறைகூவி அழைத்தது போன்று, இக்கோயிலின் திருப்பணிக்கு ஆவன செய்திட இறை அன்பர்கள் முன்வருவார்களாக.

———

## நற்பணிகள் பல புரிந்து வாழ்க!

தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் இன்று (22—9—82) 85ஆம் அகவையை எட்டிப் பிடித்திருக்கும் செய்தி தமிழ் கூறும் நல் உலகுக்கு மகிழ்ச்சியளிப்பதாகும்.

சை. சி. நூ. பதிப்புக் கழகம் 1700 நூல்களுக்குமேல் வெளியிட்டு அவரால் நிலைபெற்று, புகழ்பெற்று விளங்குகிறது.

நாட்டுக்கும், மொழிக்கும், மக்களுக்கும், சமயத்திற்கும், சமூகத்திற்கும் அவர் செய்த தொண்டுகள் மிகப் பல.

அவர் இன்னும் பல்லாண்டுகள் நல்ல உடல்நலத்தைப் பெற்றிருந்து நற்பணிகள் பல புரிந்து சிறப்பெய்தி வாழ இறைவனை வணங்கி வாழ்த்துகிறேன்.

கி. ஆ. பெ. விசுவநாதம்.
திருச்சி.

ஆசிரியருக்குக் கடிதம்:

## சத்துணவுத் திட்டமே சிவபூசை

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறு ஒன்று அறியேன்......" (தாயுமானர்)

"......ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே" (மணிமேகலை)

"நம்பர் அடியார் அணைந்தால் நல்ல
திரு அமுதளித்" தார் காரைக்காலம்மையார்
(பெரியபுராணம்)

நம்பர் அடியார் - இறைவன் அடியார்; மக்கள்.

இத்திட்டம் பகுத்துண்டு பல்லுயிர் காக்கும் மன்பதை ஆக்க அரசு அமைய வித்தாகும். இச்சிறந்த பணிக்கு—குழந்தைகட்கு உணவளிப்பது சிவநெறியிற் கூறப்பெறும் மகேசுவர பூசையாகும். இதனைப்,

"படமாடுங் கோயில் பகவற்கு ஒன்று ஈயின்
நடமாடுங் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நடமாடுங் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயின்
படமாடுங் கோயில் பகவற்கு அது ஆமே" (திருமூலர்)

இதன் பொருள்: "கோயிலில் உள்ள கடவுளுக்கு ஒன்றைக் கொடுத்தால் அது மக்களுக்குப் பயன்படாது; ஆனல் மக்களுக்குக் கொடுத்தால் அது கடவுளுக்குக் கிடைக்கும்" என்பதாம்.

ஆகவே, இறைவனுக்கு அன்புள்ளோர் இப் பணிக்குத் தம் மாத வருவாயில் அன்புகூர்ந்து நூற்றில் ஒரு பங்கை அரசுக்கு அளித்து இறைவன் அருளுக்கு உரியவர்களாக வேண்டுகின்றேன்.

இப்பணிக்கு என் திங்கள் வருமானத்தின்படி இந்த ஆவணி முதல் மார்கழி வரையிலான 5 திங்களுக்கு ரூ. 30-75ஐ அரசுக்கு விடுத்துள்ளேன். 1983-ஆம் ஆண்டுக்குரிய ரூ. 60-75ஐ அரசுக்கு விடுப்பேன். என் வாணுள் முழுவதும் இப்படிச் செய்வேன்.

யாவரும் "இத்திட்டம் சிறந்தது; நல்லது" என்று ஒருமுகமாக நின்ருல் நாடுய்யும். முயன்ருல்—விரும்பினுல் ஆகாதவை உண்டோ?

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"

இங்ஙனம்,

**மறை. திருநாவுக்கரசு**

ஒய்வுபெற்ற தமிழ்ப் பேராசிரியர்.

(அகவை 76)

# யானை உண்ட அதிரல்

(Dillenia Indica)

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு., புதுவை.]

அதிரல் என்பது ஒரு கொடியாகும் என்று அகநானூறு, புறநானூறு, முல்லைப் பாட்டு, சிலப்பதிகாரம் முதலான நூல்கள் கூறுகின்றன. குறிஞ்சிப் பாட்டு என்ற நூலும் இதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளது.

"எல்வி மலர்ந்த பைங்கொடி அதிரல்
பெரும்புளர் வைகல் அரும்பொடு வாங்கிக்
கான யானை கவளம் கொள்ளும்" —அகம். 157

யானை தனது துதிக்கையைக் கொண்டு வளைத்து மரம், செடி, கொடிகளை உண்பதால் 'கவளம்' என்று அகநானூறு கூறியுள்ளது. கவழம் என்றும் பிற்காலத்திய நூல்களும் நிகண்டுகளும் வழங்கும். அதிரல் என்ற கொடியை யானை கவளமாக விழுங்குவதை நான் எனது நூலான 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' என்ற நூலில் எழுதியுள்ளேன். பெண் யானை உண்ட மூங்கில் முளை எப்படிக் கருவை அழித்தது என்று கூறிய செய்தி அறிவியலின்படி உண்மையானது என்பதைச் செல்வியில் எழுதினேன். இன்றும் சித்த வைத்தியத்தில் மூங்கில் இலை வேறு சில சரக்குகளோடு கலந்து பெண்களின் கருப்பச் சிதைவுக்குக் கொடுப்பதைப்பற்றி நான் கேள்விப்பட்டுள்ளேன்.

அதிரல் என்பது (Dillenia) என்ற குடும்பத்தைச் சார்ந்த செடியாகும். இது கொடியாகவும், சிறுதூருகவும், மரமாகவும் காணப்படும். யானை இந்தச் செடியின் மரத்தின் கனியை விரும்பி உண்பதனுல், அதன் எச்சத்துடன் விதை விழுந்து பரப்பப்படும் என்று சொல்லியிருப்பது முக்கியமானது. (Dillenia Indica with an orange-red papery scaly bark and very large showy white flowers and a fruit is much sought after by elephant and the seeds are distributed by this way. The fruit is distinctly tart but with plenty of sugar and the seeds are distributed in this way.) காட்டு யானை அதிரல் கொடியின் காய் பழுக்கும் வரை காத்திராது அரும்பொடு தின்பதை அகநானூறு கூறியிருப்பதையும் கவனிக்க வேண்டும்.

சங்கப் புலவர்கள் அறிவியல் சார்ந்த புலவர்கள் என்பதற்கு இச் செய்தி ஒரு சான்ருகும்.

கழக வழியாக நான் எழுதிய 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' என்ற நூலைக் குறித்து (Sunday Express) என்ற ஞாயிறு இதழில் எழுதிய ஓர் ஆய்வாளர் அதை (Bible of the forester) என்று வர்ணித்துள்ளார். அதில் காட்டு யானையின் சாதியை நகத்தை வைத்தும் வேறு சில குறிகளை வைத்தும் நான் விளக்காததைப்பற்றி எழுதியிருந்தார். அவை பிற்காலத்திய புராணச் செய்திகள் என்று நான் மறுத்து எழுதினேன். சங்கப் புலவர்கள் யானையைப்பற்றிப் பாடிய செய்திகள் அறிவியல், விலங்கியல் இரண்டிற்கும் முற்றிலும் ஒத்து வருவதாகும் என்று விளக்கினேன். அதற்கு மறுப்புக் கூறவில்லை.

அதிரல் என்பதற்குச் சென்னைப் பல்கலைக்கழக அகராதி (Madras Lexicon) காட்டு மல்லிகை என்று சிலப்பதிகார அரும்பத உரையைப் (சிலம்பு. 13—156) பின்பற்றிக் கூறியுள்ளது. முல்லைப் பாட்டு உரையில் புனலி என்று நச்சினர்க்கினியர் உரை கூறியுள்ளார். மரத்தில் பரவிய அடித்தூறு என்று வின்சுலோ அகராதியில் கூறப்பட்டுள்ளது. அகநானூற்றில் கோங்க மரத்தில் பற்றுக்கோடு கொண்டு ஏறும் கொடியாகக் கூறப்பட்டுள்ளது. ஆனல் அகநானூறு கூறிய மேலே காட்டிய ஒரே செய்தியிலிருந்துதான் அதிரல் எதுவென்று கண்டு கொள்ள முடிகின்றது. அகநானூற்றில் அதிரலைப்பற்றிச் சில பாடல்கள் உள்ளன.

"முகைபிணி அவிழ்ந்த கோங்கமொ டசைஇநனை
அதிரல் பரந்த அந்தண் பாதிரி
உதிர்வீ அஞ்சினை தாஅய் எதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்
அணங்குடை நகரின் மணந்த பூவின்"
—அகம்-99

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு
ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்க்
கொய்குழை யதிரல் வைகுபுலர் அலரி
சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி
இகல்முனைத் தழீஇய ஏறுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்
வான்ஙிணப் புகவின் வடுகர் தேஎத்து"
—அகம். 213

"நன்முகை அதிரல் போதொடு குவளைத்
தண்நறுங் கமழ் தொடை வேய்ந்தநின்
மண்ணார் கூந்தல் மரீஇய துயிலே" —அகம். 223

"புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ
நுண்கொடி அதிரலொடு நுணங்கறல் வரிப்ப
அரவெயிற்று அன்ன அரும்புமுதிர் குரவின்
தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழ்க்" —அகம். 237

"கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ
வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச்
சில்லைங் கூந்த லழுத்தி மெல்லிணர்த்
தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்" —அகம். 261

"சிலையே றட்ட கணைவீழ் வம்பலர்
உயர்பதுக் கிவர்ந்த ததர்கொடி அதிரல்
நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டுஞ்
சுரனிடை விலங்கிய மரனேங் கியவின்" —அகம். 289

"பார்வல் வெருகின் கூரெயிற் றன்ன
வரிமென் முகைய நுண்கொடி அதிரல்
மல்ககல் வட்டியர் கொளவிடம் பெறுஅர்
விலைஞ ரொழித்த தலைவேய் கான்மலர்" —அகம். 391

"உருகெழு மஞ்ஞை ஒலிசீர் ஏய்ப்பத்
தகரம் மண்ணிய தண்நறு முச்சி,
புகர்இல் குவளைப் போதொடு தெரிஇதழ்
வேனில் அதிரல் வேய்ந்தநின்
ஏமுறு புணர்ச்சி இன்துயில் மறந்தே" —அகம். 393

"நெடுநா வொண்மணி கிழத்திய நடுநாள்
அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்
சிதர்வர லசைவளிக் கசைவந் தாங்குத்
துகின்முடித் துப் போர்த்த தூங்க லோங்குநடைப்
பெருமூ தாளரேமஞ் சூழப்"
—(பத்துப்பாட்டு) (முல்லைப்பாட்டு-50-54)

"செருந்தி அதிரல் பெருந்தண் சண்பகங்
கரந்தை குளவி கடிகமழ் கலிமாத்
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோட்டம்
வாழை வள்ளி நீணறு நெய்தல்"
(பத்துப்பாட்டு) (குறிஞ்சிப்பாட்டு-75-79)

"குயில்வா யன்ன கூர்முகை அதிரல்
பயிலா தல்கிய பல்காழ் மாலை
மையிரும் பித்தை பொலியச் சூட்டிப்
புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர்"

—புறம். 269 (ஔவையார்)

"அவரோ வாரார் தான்வந் தன்றே
புதுப்பூ அதிரல் தாஅய்க்
கதுப்பற லணியுங் காமர் பொழுதே" —ஐங்குறுநூறு-345

"மாக்கொடி அதிரல் பூவொடு பாதிரித்
தூத்தகட்டு எதிர்மலர் வேய்ந்த கூந்தல்
மணங்கமழ் நாற்றம் மரீஇ யாமிவள்
சுணங்கணி ஆகம் அடைய முயங்கி"

—நற்றிணை-52

"முகைவீ அதிரல் மோட்டுமணல் எக்கர்
நெளவி நோன்குளம்பு அழுந்தென எள்ளி
உருக்குறு கொள்கலங் கடுப்ப விருப்புறத்
தெண்ணீர்க் குமிழி இழிதரும்
தண்ணீர் தணைஇ னின்ற பொழுதே" —நற்றிணை—124

"உலகம் படைத்த காலைத் தலைவ
மறந்தனர் கொல்லோ சிறந்திசி னோரே
முதிரா வேனில் எதிரிய அதிரல்
பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்"

—நற்றிணை-337

(முற்றாத இளவேனிற் காலத்தை எதிர்நோக்கிய காட்டு மல்லிகை மலர்)

இந்த அதிரல் கொடியின் பூ குயில்வாய் போல விடியற் காலையில் பூப்பதாகக் கூறப்பட்டுள்ளது. இதன் கூரிய மொட்டு காட்டுப் பூனையின் கூரிய பல்லைப்போல் இருந்ததாகக் கூறியதை யும் காணலாம். கோங்கு மாலையில் பூப்பதாகவும், அதிரல் காலை யில் பூப்பதாகவும், கூறப்பட்டிருப்பதால் செடிகள் எக்காலத்தில் பூக்கின்றன என்பதையும் சங்கப் புலவர்கள் நுணுக்கமாகத் தெரிந்து கூறினர் என்பது தெளிவாகின்றது. அதிரலின் பூவை வைகுபுலர் அலரி, வைகறை அரும்பு என்று அகநானூறு கூறு வதையும் காணலாம். இது வெண்மையும் நறுமணமும் உடைய தால் மகளிரும், ஆடவரும் தலையில் மல்லிகையைப் போலச் சூட்டிக்கொண்டதால் சிலப்பதிகார உரையில் மோசி மல்லிகை யைக் காட்டு மல்லிகை என்றழைத்தனர்.

சிலப்பதிகாரப் புறஞ்சேரியிறுத்த காதையில் பல அழகிய மரஞ்செடிகள் கூறப்பட்டுள்ளன.

"குரவமும் வகுளமுங் கோங்கமும் வேங்கையும்
மரவமு நாகமுந் திலகமு மருதமும்
சேடலுஞ் செருந்தியுஞ் செண்பக வோங்கலும்
பாடலந் தன்னொடு பன்மலர் விரிந்து
குருகுந் தளவமுங் கொழுங்கொடி முசுண்டையும்
விரிமலர் அதிரலும் வெண்கூ தாளமும்
குடசமும் வெதிரமுங் கொழுங்கொடிப் பகன்றையும்
பிடவமு மயிலையும் பிணங்கரின் மணந்த"

—சிலப்பு 13. 151-158.

என்று கூறியுள்ள வரிகளில் விரிமலர் அதிரல் என்ற விளக்கம் பொருத்தமானது. பெரிய வெள்ளை மலரை உடையது என்று செடிநூலார் கூறியுள்ளனர் (Very large showy white fllowers). நறுமணமுடைய பூவானதால் காட்டு மல்லிகை என்றனர் அடியார்க்கு நல்லார். புனலி பூத்து அசைகின்ற கொடியினை யுடைய சிறு தூறுகள் என்று நச்சினார்க்கினியர் உரை கூறி யுள்ளார். புனலிக்கொடி என்பதிலும் பொருத்தமுள்ளது. (Dillenia Indica is very common in the banks of streams and indicate moist places.) அதிரல், புனல் இருக்கும் இடத்திலே காணப்பட்டதாலும், புனல் இருக்கும் இடத்தையே காட்டியதா லும் புனலிக்கொடி என்றழைக்கப்பட்டது. இதில் ஒருவகை மர மாகவும் வளரும். அதன் காய்களைக் காட்டில் வாழும் யானைகள் மிகவும் விரும்பி உண்ணும். பழங்குடி மக்கள் இதன் கனிகளைப் புளியாகப் பயன்படுத்துவர். இம் மரம் அடர்த்தியாக வளரும். இம் மரத்தைக் களையெடுப்பது மிகவும் கடினமாகும். இம் மரத்தை வெட்டினால் பல தூறுகள் விடும். அதனால்தான் வின்சுலோ அகராதியில் அடித்தூறு என்று அழைத்தார்.

அடியார்க்கு நல்லார் உரையைப் படித்தால் 'சிறு தூறுகள்' என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. (It is useless to girdle it and if cut down sends out numerous coppice shoots of great strength) அதனால்தான் சிறு தூறுகள் என்று அழைக் கப்பட்டது. அதிரலை (Dillenia Indica) என்று அறிவியலார் அழைப்பர்.

— —

## திருக்குறள் வகுப்பு

*சென்னை, சிந்தாதிரிப்பேட்டை திருக்குறள் மன்றத்தின் சார்பில் (19 கலவ செட்டித்தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2) வெள்ளிக் கிழமைதோறும், மாலை 6-30 மணியளவில், வாழ்வியற் புலவர் தவத் திரு. சொ. ர. தேமொழியார் அவர்களால் திருக்குறள் வகுப்பு நடத்தப் படுகிறது. அன்பர்கள் திரண்டுவந்து கேட்டுப் பயனுறுவார்களாக.*

**திருக்குறள் மன்றத்தார், சென்னை-2.**

# வேர்ச்சொற் கட்டுரைகள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

(சிலம்பு ருசு, பரல் கஉ, ருஉஎ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 'இல்'—(தாழ்தற் கருத்து வேர்)

இல்—இள்—இடு=கீழே தாழ்தல், தாழ்த்துதல், வைத்தல்.

ஒ. நோ : கொள்—கொடு. கொள்—வளைதல்,

தாழ்தல், தன்பாற்சேர்த்தல். கொடு=சேர்ப்பித்தல்.

ம., க., தெ., து. இடு=வை.

இடுதல்=1. வைத்தல். "காயத்திடுவாய்" (திருவாச. 33, 8). 2. கொடுத்தல். "இட்டார் பெரியோர்" (நல்வழி 2). 3. சொரிதல் (திவா.). 4. குறியிடுதல் (பெயரிடுதல்). "இட்டதொரு பேரழைக்க வென்னென் ருங்கு" (சி. போ. 2, 1, 1). 5. முட்டையிடுதல். 6. புதைத்தல். 'இடுகாடு' (உ.வ.). 7. தொடுத்துவிடல். "கணையிட்டு" (திருப்பு. 418). 8. தொடங்குதல் திவ். திருவாய். 2, 10, பன்னீ. பிர). 9. செய்தல். "அரக்கனும் காளமேகம் இடுகின்ற வேள்வி" (கம்பரா. நிகும். 99). 10. உண்டாக்குதல். "கள்ளியிட்ட வகில்" (இரகு. நரை. 52). 11. ஏற்றிச் சொல்லுதல். "படாததொரு வார்த்தை யிட்டன ரூரார்" (சிலப். 9. 48). 12. உவமித்தல் (சீவக. 2423 உரை). 13. அணிவித்தல். "புங்கவனிடுவளை" (திருவிளை. வளையல். 27). 14. பரிமாறுதல். இடுகின்றவள் தன்னவளானல் அடிப்பந்தியிலிருந்தாலென்ன, கடைப்பந்தியிலிருந்தாலென்ன? (உ. வ.). 15. போகடுதல். "ஈந்தான் சிலை நிலத்தி லிட்டான்" (கந்தபு. வள்ளி. 36). 16. கைவிடுதல் "இளைய வளநாகிட்டு" (சீவக 1226), 17. குத்துதல். "இடு மருப்பியானை" (கலித். 24, 10). 18. வெட்டுதல் (சீவக. 1680: உரை).

இடு—இடுகை—கொடை (பிங்.). இடுகாய்=1. சூறைத் தேங்காய். 2. பணயத்திற்காக ஒன்றன்மேலொன்றை அடித்து உடைக்கும் தேங்காய். இடுசிவப்பு=செயற்கைச் சிவப்பு. இடுவந்தி=பொய்க்குற்றச்சாட்டு. 'பொற்கொல்லன் நெஞ்சம் இடுவந்தி கூறுதலைப் புரிந்துநோக்க' (சிலப். 16, 120 உரை).

சொல்லின் பொருள் வளர்ச்சிக்கேற்ப, சொற்றிரிந்து பொருள் வேறுபடுவது ஒருவகை சொற்றிரிபின்றிப் பொருள் வேறுபாடு மட்டும் நிகழ்வது மற்றொருவகை. இவண், 'இடு' முதனிலை வகையைச் சார்ந்தவை. சொற்றிரிபின்றி அச் சொல்லை ஆள்வோரின் உணர்த்தும் திறனுக்கேற்ப தொடர்புடைய வினைப் பொருள் பலவற்றையுணர்த்தும். 'நெற்றியில் நீறிடு' என்னுந் தொடரில் இடுதல்—மெல்லத் தடவுதல், பூசுதல் என வைத்தல் வினையின் மென்பாங்கையும் 'அவன் முதுகில் நான்கு இடு' என்னுந் தொடரில் குத்து, தாக்கு என வைத்தல் வினையின் வன்பாங்கையும் குறித்தல் காண்க. 'இடு' வினையடியாகத் தோன்றிய பெயர்ச்சொற்களும் பொருளால் விரிவடையும்.

இடு—இடம்—இடை (இடம்) எனத் திரியும் பெயர்ச் சொற்கள் முதலில் தாழ்வான இடத்தையும், கற்பாறைகள் நிறைந்த காட்டுப் பகுதிகளில் நடந்து செல்லும் வழியையும், அதன் வழிப்பொருளான தொடர்பு, காரணம் ஆகிய கருத்துகளை யும் குறித்துப் பொருளால் விரிவடையும்.

இடு—இடம் = தாழ்வான நிலப் பகுதி.

இடு—இடை—1. தாழ்ந்த பள்ளமான இடம். ''கருங்கல்லி னிடைதொறும்'' (புறநா. 5, 1). 2. வழி, ''நீரில்ல நீளிடைய'' (புறநா. 3) 3. தொடர்பு. ''உங்களோ டெங்கள் இடையில்லையே'' (திவ். திருவாய். 8, 2, 7). 4. வாய்ப்பான நேரம். ''உடையோர் போல இடையின்று குறுகி'' (புறநா. 54). 5. காரணம். ''இடை தெரிவரியாது'' (சூளா. கலியாண. 144).

இடு—இடை—இடைதல் = தாழ்தல், மனஞ்சோர்தல், வருந்துதல், பின்வாங்குதல், விலகுதல்.

இடைதல் = 1. சோர்தல் (சீவக. 446 உரை). 2. தளர்தல். ''இடைந்திடைந் துருகு மெளியனேன்'' (தாயு. சிற்சு. 3 . 4. தாழ்தல். 'அவனுக்குச் சிறிது இடைந்து போ' (உ. வ.). 5. பின்வாங்குதல். ''அசமுகி இடைந்து போனாள் (கந்தபு. மகாகாளர். 20). 6. விலகுதல். 'இடைந்தொதுங்குகை' (ஈடு. 5, 4, 6) 7. இடையீடு. ''இடையில் வண்புகழ்க் கொடைமையானும்'' (தொல். பொ. 76) 8. தடுத்தல். ''இடை கொண்டியாமிரப்ப'' 9. துன்பம் (திருக்கோ. 368, உரை).

இடு—இடை = நடுப்பகுதி.

தாழ்வான பகுதியை முதலிற் குறித்த 'இடை', இருபாலும் உள்ள மேட்டுப் பகுதிக்கு நடுவிலிருத்தலான் அமைப்பிடம்

நோக்கி நடுப்பகுதிப் பொருளில் (Semantic shift) பொருள்தாவி வழங்கலாயிற்று.

இடு—இடை = 1. நடு (திவா.). 2. இடைக்காலம், "இடை கொட்கின்" (குறள். 663). 3. நடுத்தர வகுப்பினர். "இடை யெலா மின்னுமை யஞ்சும்" (நாலடி, 297).

இடை—இடையல் = துகில் (திவா.), இடுப்பிலணியும் ஆடை. இடைக்கலம்—மட்பாண்டம். "இல்லுள் வில்லேற்றி இடைக்கலத்தெய்துவிடல்" (பழ. 24).

இடையாட்டம் = புலனம் (விஷயம்). 'பரிசோதிக்கப் போகா தாயிற்று தோஷப்பரப்பு இவ்விடையாட்டத்து என்றபடி' (ஈடு. 1, 2, 2).

இடையீடு = 1. அமைவு (சமாதானம்). "ஏவிய கடாவுக் கிடையீடாவது" (ஞானா. 67, 10). 2. இடையில் ஏற்படும் தொல்லை, இடையூறு. 'பகற்குறியிடையீடு' (நம்பியகப். 155). 3. வேறுபாடு. "பெருமறையுடன் மெய்த் தொண்டர்க் கிடையீடு பெரிதாமன்றே" (பெரிய. திருஞான. 592). 4. இடையில் விடுகை. "விட்டுவிட் டெறிவதன்றி இடையீடின்றி அறியமாட் டாது" (சி. சி. 2, 94. சிவஞா.).

இடைவெட்டு = தற்செயல். 'அவனுக்கிது இடைவெட்டிலே கிடைத்தது' (உ. வ.).

(தொடரும்)

———

## சொல்லாய்வுக் கருத்தரங்கு நிகழ்ச்சி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் சென்ற மாதச் சொல்லாய்வுக் கருத்தரங்கம் 10—9—82 அன்று பிற்பகல் 3 மணிக்கு வடசென்னை மகளிர் கல்லூரி தமிழ்த்துறையில் தமிழ்ப் பேராசிரியர் தலைமையில் நடைபெற்றது. அகரமுதலித் திட்டத்தின் பொறுப்பு இயக்குநர் திரு. இரா. மதிவாணன் 'பாவாணரின் வேர்ச்சொல் காண் வழிமுறைகள்' என்னும் பொருள் குறித்து உரையாற்றினார். 'ஆண்டு' என்னும் சொல்லின் தோற்ற வளர்ச்சி குறித்த ஆய்வு நடைபெற்றது. கருத்தரங்க நிகழ்ச்சியில் கல்லூரி முதல்வரும் பங்கேற்று உரையாற்றினார்.

# மரபுக் கவிதை செத்துவிட்டதாம்!
# ஒரு 'ஞானி'யின் உளறல்!

[கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்]

ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டில் வாக்களித்தபடி தஞ்சையில் தமிழுக்கெனத் தனியே ஒரு பல்கலைக்கழகத்தைச் சிறப்பாக நிறுவியுள்ளார் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்கள்.

இந்தப் பல்கலைக்கழகத்தின் முதலாண்டு நிறைவு விழாவும், கவிதைக் கருத்தரங்கமும், பல்கலைக்கழக வளாகத்தில் 1982 செப்டம்பர் 15, 16 நாட்களில் சிறப்பாக நடைபெற்றன.

தெளிந்த சிந்தனையாளரான துணைவேந்தர் பேரறிஞர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்களின் சிறந்த ஏற்பாடுதான் இந்தக் கருத்தரங்கமே. அதற்காகத் துணைவேந்தர் அவர்களையும் மற்றும் பொறுப்பாளர்களையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும். ஆனால் பேராசிரியர் ஒருவர் கருத்தரங்க நிறைவு நாளில் தெளிவாகக் குறிப்பிட்டதுபோல, இரண்டு நாள் கருத்தரங்கமும் ஏதோ வசன கவிதைக் கருத்தரங்கம் போலவே பளிச்சிட்டன. மரபுக் கவிதைக்காகத் தனியே ஒரு கருத்தரங்கம் நடத்த வேண்டும், என்று கூட அந்தப் பேராசிரியர் கருதினார். அவரது கருத்தில் தவறில்லை. இதற்குக் காரணம் பங்கு கொண்டவர்களில் பெரும்பாலோர் வசன கவிதைக்காரர்கள்! அல்லது அவர்களுக்கு வக்காலத்து வாங்கும் எழுத்தாளர்கள். நல்ல மரபுக் கவிஞர்களில் என்னைத் தவிர கு. ச. கி., அரங்கசீனிவாசன், முருகு சுந்தரம், த. கோவேந்தன் போன்ற சிலரே கலந்து கொண்டோம். இன்னும் சிலர் ஆற்றில் ஒரு காலும் சேற்றில் ஒருகாலும் வைப்பது போல மரபுக்கவிதை—வசனகவிதை இரண்டிற்கும் பாலம் போலத் தோன்றினாலும் இவர்கள் மரபுக் கவிதைக்காக எதுவும் பேசத் துணியவில்லை. இதற்கு விதிவிலக்காக விளங்கியவர் கவிஞர் பொன்னீலன்தான். ஓசை நயமும் உயர்ந்த சிந்தனையும் உடைய மரபுக்கவிதைகளே மக்களைக் கவர்கின்றன என்று அடித்துப் பேசினார் பொன்னீலன். வசன கவிஞர் என்று யாரோ இவர்மீது முத்திரை குத்திப் பேசிய போது மறுத்துத் தமது மரபுக்கவிதை வேகத்தைக் காட்டினார்.

புலவர் புலமைப்பித்தன், சுரதா, முடியரசன், கே. சி. எஸ். அருணுசலம், பொன்னடியார் போன்ற கவிஞர்கள் பலர் கருத்தரங்கிற்கு வரவில்லை. அழைப்பு அனுப்பியும் சிலர் வரமுடியாத சூழ்நிலை என்று விளக்கம் தனியே சொல்லப்பட்டது.

கருத்தரங்கில் இதயம் குமுறச் செய்த சில பேச்சுகளும் 'அபசுரம்' போல ஒலித்தன. குறிப்பாக 'ஞானி' என்ற ஒரு மேதாவி மேடையேறி மெல்லிய குரலில் புல்லிய கருத்துகளை ஈரத்துணி போட்டுக் கழுத்தை அறுப்பது போலப் பேசினுர். மரபுக் கவிதையை அநியாயமாக வம்புக்கு இழுத்துச் சாடினுர். யார் இந்த 'ஞானி' என்று கேட்டுவிடாதீர்கள். இவரைப்பற்றி ஒரு குறுகிய வட்டாரத்திற்குத்தான் தெரியும். இவரது உளறல் தமிழின் அடிப்படையிலேயே வெந்நீர் ஊற்றியது போல இருந்தது. இவரது கூற்றில் ஒரு பகுதியைத் தட்டச்சுச் செய்யப்பட்ட கட்டுரையிலிருந்து அப்படியே எடுத்துத் தருகிறேன்.

"மரபுக் கவிதை செத்துவிட்டது! பழம் பெருமை பாரமாயிற்று!..." இப்படி நாக்கில் நரம்பில்லாமல் தமிழ்நாட்டில் இருந்து கொண்டே தமிழ்க் கவிதை செத்துவிட்டது என்று சொல்லும் துணிச்சல் இவருக்கு எப்படி வந்தது! இவரது பேச்சில் இந்தப் பகுதியைக் கருத்தரங்கில் படிக்க எப்படி அனுமதித்தார்கள்?

அது மட்டுமன்று! "சங்ககாலம் பொற்காலமன்று!" என்று வஞ்சகமான உரை கல்லில் தீட்டுகிருர் இந்த அறிவாளி! இவர் பேச்சு முடிந்தவுடனே மனங்குமுறிய நான் இரண்டு கேள்விகளை நாகரிகமான முறையில் இவருக்கு அனுப்பினேன். என் கேள்விகள் :—

(1) மரபுக் கவிதை செத்துவிட்டது என்ற உங்கள் கருத்து முற்றும் பொருத்தமற்றது! இளங்கவிஞர்கள் பலர் புதிய புதிய சிந்தனையில் உயர உயரப் பறந்து அற்புதமான மரபுக் கவிதைகளை வழங்கி வரும் உண்மை உங்களுக்குத் தெரியாதா?

(2) இலக்கியத்தில் சங்ககாலம் பொற்காலம் தான். அதைப் பொற்காலமன்று என்று கூறுபவர்களைத் தமிழ்ப் பகைவர்கள் என்று ஏன் சொல்லக்கூடாது?

இந்த இரண்டு கேள்விகளுக்கும் சரியான பதில் சொல்ல முடியாமல் ஏதோ 'நூற்று விழுக்காடு' என்று மழுப்பிச் சொல்லி நழுவினுர், ஞானி!

எனது இரண்டாவது கேள்வி திசைமாறிப் போவதாகக் குறிப்பிட்டு அதைப் படிக்காமலே விட்டுவிட்டார் இந்தப் பொறுப்பற்றவர்.

மரபுக் கவிதைச் செல்வங்களின் அடிப்படைச் செழிப்பினால் தானே தமிழ்ப் பல்கலைக்கழகமே தோன்றியுள்ளது என்ற சாதாரண உண்மைகூட 'ஞானி'க்குத் தெரியவில்லையே! அல்லது தெரிந்தே தமிழைப் பழிக்கிறாரோ தெரியவில்லை! சங்க இலக்கியம் முதல் பாவேந்தர் பாடல்கள்வரை அத்தனை மரபுக் கவிதைச் செல்வங்களும் காலவெள்ளத்தால் அழியாமல் இன்னும் பல கோடி ஆண்டுகள் நிலைத்து நிற்கக் கூடியவை என்பதை எவரும் மறக்கமுடியாது. பாவேந்தர் பரம்பரைக் கவிதைகளுக்கும் சாவு கிடையாது.

''மெல்லத் தமிழ் இனிச் சாகும்'' என்று சொன்னவனை அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே 'பேதை' என்று குத்திக் காட்டினார் மகாகவி பாரதியார்.

''மரபுக் கவிதை செத்துவிட்டது'' என்று சொல்கின்றவரை என்ன சொல்லிச் சாடுவது? செவிகளைச் சுட்டெரித்த இது போன்ற பொருந்தாக் கட்டுரைகளுக்கெல்லாம் ஒரு பிராயச்சித்தம் (கழுவாய்) போல, அற்புதமாக, அமைதியாக, தமக்கே உரிய பாணியில் நிறைவுரை செய்து ஆறுதல் தந்தார் துணைவேந்தர்.

'மரபுக் கவிதை செத்துவிட்டது' என்றெல்லாம் பேசுவது நமது பழம்பெருமையை இழிவு செய்வதாகும் என்று பக்குவமாகப் பதில் அளித்த துணைவேந்தருடைய சான்றாண்மை போற்றத் தக்கது.

நன்றி கூறிய பதிவாளர், அறிஞர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களும் கடந்த ஐந்து ஆண்டுகளில் எத்தனையோ அருமையான மரபுக்கவிதைத் தொகுப்புகளும் வெளியாகியுள்ள சிறப்பைச் சுட்டிக்காட்டி (அவற்றையெல்லாம் புரட்டிக்கூடப் பார்க்காத) வசன கவிதைக்காரர்களுக்கு அமைதியாக இதமாகச் சூடு கொடுத்தார்.

அமர்வு ஒன்றுக்குத் தலைமை தாங்கிய வசன கவிதைக்காரர் கடந்த ஐந்தாண்டுகளில் வந்துள்ள கவிதைகள் உமியே அன்றி அவல் அல்ல என்று அங்கலாய்த்துக்கொண்டார். வசன கவிதைகளுக்குத்தான் அவருடைய குற்றச்சாட்டு ஒருவேளை பொருந்தக்கூடும்!

பொதுவாகப் பெரியார், அண்ணா, தமிழ் உணர்ச்சி, இந்தி எதிர்ப்பு போன்ற சொற்களையே 'அலர்ஜி'யாகக் கருதும் வகுப்பாருக்கு என் போன்ருரின் கட்டுரைக் கருத்துகள் இனிக்கும் என எதிர்பார்க்க முடியாதுதான்.

''நல்ல சிந்தனை நிறைந்த மரபுக்கவிஞர்களே விழிப்பாக இருங்கள்'' என்று எச்சரிப்பது போல் இருந்தது, கவிதைக் கருத்தரங்கம்.

வசன கவிதைக்காரர்களின் வெற்று ஆரவாரத்தைப் பொருட்படுத்தாமல் தமிழ்க் கவிதைச் செல்வத்தை வளப்படுத்த வேண்டிய பொறுப்பு நமக்கு இருக்கிறது.

மாண்புமிகு புலமைப்பித்தன் போன்றவர்கள் கருத்தரங்கிற்கு வந்திருந்தால் வசன கவிதைக்காரர்களின் கொட்டத்தை இன்னும் கடுமையாக மட்டந்தட்டியிருக்க முடியுமே என்ற ஏக்கத்தோடு சென்னைக்குத் திரும்பினேன்.

ஆயினும் ஒரு சிலராகக் கலந்துகொண்ட நாங்கள் எங்கள் கருத்தைத் தெளிவாகச் சொல்ல அஞ்சவில்லை என்ற வகையில் மனநிறைவு ஏற்படுகிறது.

———

## 'வேதநாயகர்'

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

வேத நாயகர் நீதித் தாயவர்;
முத்தமிழ்க் கலைகளின் முதல்வர்—நாளும்
இத்தரை போற்றிடும் ஏந்தலர்!

மாதர் பண்புகள்; மேன்மைகள் தம்மை
முதுபுவி யெங்கும் முழங்கிட—'பெண்மதி
மாலை' யெனும்நூல் கண்டவர்!

ஏதம் இன்றியே எழுத்து வன்மையால்
இழிதகு மடமைகள் ஏகிட—நெஞ்சில்
விழுமிய உணர்வுகள் நாட்டினர்!

'தாது வருடத்' தீரா வறுமையைத்
தமது கருணையால் வென்றவர்—மக்கள்
தமக்குப் பொருள்பல தந்தவர்!

போதை நாயகர் பெருகிப் பற்பல
பனுவலை இந்நாள் தருவார்—ஆனல்
இனி'அவர்' போலார் வருவார்!

# தமக்கென வாழாத் திரு. வி. க.

*[ஆ. உலகநாயகி]

திரு. வி. க. வும் அவர்தம் அண்ணன் உலகநாதரும் உள்ளம் ஒன்றி ஒரே வீட்டில் வாழ்ந்து அமைதி கண்டவர்கள். தம்பி பெற்ற புகழெல்லாம் தாம் பெற்ற புகழாய் நினைந்து மகிழ்ந்தவர் தமையனார் உலகநாதர். தம் தமையன் மக்களைத் தம் மக்கள் எனப் போற்றியவர் திரு. வி. க. அண்ணன் மகனை "எனக் கினியனாய்ச் செங்குருத்தென வளர்ந்துவந்த என் கண்மணி—பால சுப்பிரமணியன்' என நவசக்தியில் எழுதினார். மகனின் மறை விற்குப்பின் தமையன் மகளிரைக் கண்களெனக் காத்தவர். எனவே அண்ணன் மறைந்த பின்பும் அவர் குடும்பத்தைத் தம் குடும்பமெனக் கருதி அன்பு செலுத்தி ஆதரித்து வந்தவர். வாழ்ந்த வீட்டில் பெரும் பகுதியைப் பெண்களுக்கு அளித்துவிட்டு ஓர் அறையை மட்டும் தாம் பயன்படுத்தி வந்தார். அதுவும் அனை வரும் இறை வழிபாடு செய்யும் அறையாக இருந்தது. தந்நல மறுப்பில் இன்பம் காணும் திரு. வி. க. தனியறை ஒன்றைத் தமக்கெனக் கொண்டிருக்கவில்லை.

ஆறும் படிவம் பயின்று வந்த நாளிலே நான் பள்ளியிலிருந்து ஒருநாள மாலை மகிழ்வோடு வீடு திரும்பினேன். அப்போது வீட்டின் அலங்கோலம் என்னை அதிர்வுறச் செய்தது. தம்வாழ்வு, தம்வீடு, தம்பொருள் என நினையாதவர் திரு. வி. க. அத் தந்நலம் துறந்தவர் நாடு நலங்காண அமர்ந்து எழுதிய மேசை ஒன்று உண்டு. அதில் சில அரிய நூல்கள் இருப்பதைக் கண்டிருக்கிறேன். அம் மேசை, அவர் உடுத்தும் நாலு முழத் துண்டும் சட்டையும் வைக்கும் அலமாரி, அவர் வழிபாடு செய்த இயற்கைத் தெய்வம் முருகனின் எழில் ஓவியம் அனைத்தும் அவர் அறையினின்று வெளியே அகற்றப்பெற்றிருந்தன. அவ்வறை புதுப் பூட்டுடன் அடைக்கப்பெற்றிருந்தது. அக்காட்சியைக் கண்டு அழுதுவிட் டேன் நான். தாத்தாவின் சிறு உடைமைகள் வெளியே இருந்த காட்சியைப் பார்க்கப் பார்க்க அவருக்கு நிகழக்கூடாத துன்பம் ஏதோ நிகழ்ந்துள்ளது என எண்ணி மனம் துடித்தேன்.

"மறு பிறவி என ஒன்று அமையின் தொழிலாளர் வாழ்வு எழிலான வாழ்வாக மாற உழைப்பேன்" எனச் சூளுரைத்தவர்

---

*திரு. வி. க. அவர்களின் பெயர்த்தி.

திரு. வி. க. திரு. மு. வ. அவர்கள் "ஓயாது உழைத்தார். இரவும் பகலுமாக எழுதினர். ஒவ்வொரு கழகத்திற்கு மட்டுமல்லாமல் ஒவ்வொரு மனிதருக்காகவும் தம் அரிய காலத்தைச் செல விட்டார்" எனத் தம் "திரு. வி. க." என்னும் நூலில் அவரைப் போற்றியுள்ளார். இவ்வாறு மற்றவர் உயர்விற்கெல்லாம் உழைத்த 'தமிழ்த் தென்றல்' தாம் வாழ ஒரு சொந்த வீட்டை அமைக்கும் முயற்சியை என்றும் மேற்கொள்ளவில்லை. அவர் நல்லெண்ணத்திற்கேற்பப் பல ஆண்டுகள் ஒரேவீட்டில் தொல்லை யின்றி வாழ்ந்து பணிகள் பல புரிந்தார்.

17—9—1923 "நவசக்தி"யில் "ஆண்டவன் எந்நேரமும் என்னைச் சோதித்த வண்ணமாயிருக்கிருன்" எனக் கூறியுள்ளார். ஆம். இறுதிவரை ஆண்டவன் அவர் வாழ்வோடு விளையாடினுன். இல்லறம் இனிக்க ஆணென்று, பெண்ணென்று என அளவோடு மக்கட் செல்வத்தை அளித்தான். தின்னக்கனி கொடுத்துப் பாதி தின்னும்போது தட்டிப்பறிப்பதுபோல் அவர்களை அவரிட மிருந்து பறித்துவிட்டான். ஆருண்டு வாழ்க்கையோடு அவர்தம் இனிய துணைவியாரைப் பிரித்தான். இவையெல்லாம் முடித்துப் பின்னர் இறுதிக்காலத்தே கண்ணொளியைப் பறித்துக் களித்தான். எல்லாவற்றிற்கும் மேலாக 'உனக்குப் பழகிய வீடு என்று ஒன்றும் வேண்டுமோ' எனக் குருடனின் கையிலிருக்கும் கோலைப் பறிப்பது போல் அவ் வீட்டையும் பிரிக்க விழைந்தான். மூன்று திங்கள் அவ்வீட்டை அவருக்கு அளித்து அவர் வாழ்வை இறைவன் முடித் திருக்கக்கூடாதா? அவன் விருப்பம் வேறுவகையாய் இருந்தது. விதியை வீட்டுக்காரர் உருவத்தில் அனுப்பினுன். பழகிய வீடு பலவகையில் நன்மை தரும் எனக் கருதிச் சிலகாலம் விட்டு வைக்குமாறு அவரிடம் வேண்டினர். வீடு தமக்கு வேண்டும் என உரியவரும் விடாது வற்புறுத்தினர்.

அச்சகமும் குடும்பமும் ஒன்ருக இருந்த வீடு அது. இரண் டிற்கும் ஏற்றதுபோல் வீடு எளிதில் கிடைப்பதாயில்லை வீட்டை விரைந்துபெற நீதிமன்றம் வீட்டின் உரிமையாளருக்குத் துணை நின்றது. பெண்கள் இருவரும் சேர்ந்து வாழ்வதற்கு மட்டுமாவது வீடு தேடினர். அதுவும் அப்போது கிடைப்பது அரிதாயிற்று. மன்றம் கொடுத்த தவணை முடியும்நாள் நெருங்கியது. அப்போது உரிமையாளர் வீட்டை உரிய நேரத்தில் விடாதுபோனுல் சட்டத் திற்குப் பதில் கூற நேரும் என உரைக்க வந்தார். பண்போடு பேசும் திரு. வி. க. தம்மைவிட இளையரான அவரிடம் சில நாள்கள் பொறுக்க வேண்டினர் ஆனல் வந்தவர் தொண்டர் திரு. வி. க. விற்காகச் சிலநாள் பொறுத்திருக்க விரும்பவில்லை.

என் தந்தை திரு. வி. க. அவர்களிடம் நண்பர்கள் செல்வாக்கைப் பெற்றுத் தவணை நாள்கள் வாங்க முயலுங்கள் என்று வேண்டினர். தமக்கென எதையும் யாரிடமும் கேட்டுத் திரு. வி. க. பெற்றதில்லை என்பதைத் தமிழ்நாடு அறியும். அதைக் குடும்ப நிகழ்ச்சியிலே நேரிலே நான் காணும் பேறு பெற்றேன். தமக்கு எது நேரினும் நேர்க என நினைந்து பிறர் செல்வாக்கைப் பெறத் திரு. வி. க. மனம் மறுத்தது. "Resist not the evil" என்ற விவிலியக் கருத்தால் கவரப்பட்டவரல்லரோ திரு. வி. க.?

எதிர்பாரா நிலையில் "அமீனு"வுடன் வீட்டுக்குரியவர் வந்தார். "வீட்டை ஒப்படையுங்கள். இல்லையேல் பொருள்கள் வெளியேற்றப்படும்" என்று கூறினராம். ஏழைகளின் வாழ்வு மலர—சட்டங்கள் அமையப் போராடிய சான்றோர் தம் தீமைக்குத் துணை வரும் சட்டத்தின் முன் தலைகவிழ்ந்தார். "விதி முன்ஏக தருமம் பின்னிருந்து இரங்க" எனக் கம்பர் காட்டும் இராமனின் நிலையில் திரு. வி. க. தம் சொல் வன்மை, செயல் வன்மை அனைத்தையும் மறந்து நின்றார் அன்று. என் தந்தை "நான் அரசாங்கப் பணிபுரிபவன். எனவே என்னிருப்பிடத்தை உடனே அகற்றமுடியாது" எனக் கூறிப் பொருள்களை வெளியே அகற்றும் பணிக்குத் தடை போட்டார். திரு. வி. க. வும் அவர்தம் அண்ணி யாரும் தம்முடன் இருப்பதாகக் கூறி வாதாடினர். வந்த நீதி மன்றத்து ஆள் மன்ற உத்திரவின்படி திரு. வி. க. குடும்பத்தின் இருப்பிடமென ஒரு சிறு இடத்தை ஒழித்துப் பெற முனைந்தார். இறுதியில் அவர் அறையென ஓர் அறை வந்தவர்களால் பூட்டப் பெற்றது. எத்தனையோ இல்லங்களில் ஒளிதோன்றப் பாடுபட்ட அந்தத் தமிழ்ப் பெரியாருக்கு நேர்ந்த சோதனை இன்றும் எம் குடும்பத்தார் கண்களைக் குளமாக்குகிறது. என்றைக்கும் வேதனை நிறைந்த காட்சியாய் அந்தநாள் நிலைத்துவிட்டது. அன்று மாலை நான் பார்த்த தாத்தா கலங்காத நிலையில்தான் மற்றவற்றில் கருத்திருத்தினர். அதன்பின்பும் அவர் பிறர் முயற்சியில் தம் இருப்பிடத்தை ஒழுங்காக்க முயற்சி செய்யவில்லை.

சாது அச்சகம் அவருக்குரியது. அப்போதும் அவர் அண்ணன் குடும்பத்தை ஒதுக்கி, தாம் அச்சகத்தில் ஓர் அறை எடுத்து ஓய்வு காணவில்லை. எங்களால் நேர்ந்த தொல்லைகள் இவை எனக் கருதி எங்களைச் சலித்தாரில்லை. குடும்பத்தைத் துறந்தாரில்லை. தம் நலன் நினைந்தாரில்லை. அதன்பின் இரு மாதங்கள் அவ் வீட்டில் இருந்தபோது எப்போதும்போல் இருக்கும் அன்புடைய தாத்தா அவர்களைத்தான் கண்டோம்.

என் இளம் பருவத்தில் தாத்தாவின் வாழ்வில் கண்ட அத் துயர நிகழ்ச்சி அன்று என்னைக் கலக்கியது. இன்று நினைக்கினும்

திரு. வி. க. அவர்களின் உயர்ந்த மனத்தை எண்ணி வியக்கின்றேன். இக்காலத்துத் தொண்டு செய்கிறேன் எனக் கூறித் தங்களையும் பெருக்கிக்கொள்ளும் "பெரியவர்கள்" பலரை நாம் பார்க்கின்றோம். இக் கூட்டத்தாரிடையே மற்றவர்க்காக உழைத்துத் தம்மை மறந்து தொல்லைகள் பல ஏற்று உலகை நீத்த திரு. வி. க. போன்ற தியாகச் செம்மல்களையும் நாம் பெரியவர் எனப் போற்றுகிறோம்.

"ஆணி அறைந்தார்க்கும் அன்பான தெய்வமே
தோணிஎனக் காவாய் தொடர்ந்து"

எனப் பாடியவர் திரு வி. க. அதுபோல் தாம் துயருற்றபோதும் என்றும் தமிழகத்துக்கு அன்பு காட்டி இன்று அண்ணலாய் உயர்ந்துவிட்டார் திரு. வி. க.

---

## முதுபெரும் புலவர் மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் ஐம்பதாண்டு தமிழ்ப்பணி நிறைவு பொற்கிழியளிப்பு பாராட்டுவிழா

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் நுண்மாண் நுழைபுலமிக்க போதகாசிரியர்; நூலாசிரியர்; ஆராய்ச்சியாளர். ஆதீனங்களின் தமிழ்க் கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் தமிழ்ப் பணியாற்றியவர். திருக்குறள் உரைவளம், இவர்கள் புலமை வளத்தைக் காட்டும்.

தருமைபாதீனக் குருமகா சந்நிதானம், தவத்திரு குன்றக்குடி அடிகளார், காசிமடம் அதிபர் முத்துக்குமாரசாமித் தம்பிரான் போன்ற ஆதீனத் தலைவர்கள் இவர்களிடம் தமிழ் பயின்றவர்கள்; என் தலைவர் கலைஞர் மு. கருணாநிதி, உயர்நீதிமன்ற நீதிபதி மு. மு. இஸ்மாயில், திருவாளர்கள். கி. வீரமணி, ப. நெடுமாறன். குமரி அனந்தன் போன்ற கட்சித்தலைவர்கள் பலரும் இவர்களிடம் பயின்றவர்கள். இவர்களிடம் கற்ற பலர் தமிழ்ப் புலவர்களாகவும், பேராசிரியர்களாகவும், தமிழகத்தின் திக்கெல்லாம் விளங்குகின்றனர்.

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்வுத்துறையில் பணிசெய்து வரும் தேசிகர் அவர்கட்கு ஐம்பதாண்டு தமிழ்ப்பணி நிறைவடைவதை முன்னிட்டு. அவர்களிடம் கற்ற அன்பர்கள் பலரும் பாராட்டுச்செய்து பொற்கிழி வழங்கவேண்டும் என்று விரும்பினர். பைந்தமிழ் மரபும் சிவநெறி மரபும் போற்றி வாழும் இம் முதுபெரும் புலவர்க்கு 1983 சனவரித் திங்களில் விழாவிகழ்த்த ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. அவ் விழாவில் கலந்து மகிழ்வதோடு, பொற்கிழி வழங்குதற்குரிய நிதியை உதவிட, அன்புடன் கேட்டுக்கொள்கின்றேன். விழா நாள் பின்னர் அறிவிக்கப்படும்.

பாலையம் இல்லம், வல்லப சாலை, சொக்கிகுளம், மதுரை-2.

பி. டி. ஆர். பழநிவேல்ராசன்
விழாக்குழுத் தலைவர்.

# டாக்டர் நடுவர் எஸ். மகராசன் அவர்களின் பெரும்பிரிவு

தமிழ்மொழிக்குத் தமிழ்மட்டுமே பயின்ற அறிஞர்களைப் போலவே தமிழையும் ஆங்கிலத்தையும் சட்டத்தையும் ஒருங்கு பயின்ற பேரறிஞர்களும் நிரம்பப் பணியாற்றியுள்ளனர் என்பதைத் தமிழ் இலக்கிய வரலாறு உணர்த்துகிறது. தாகூர் சட்ட விரிவுரையாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை, சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை, கணக்காயர் சோமசுந்தரபாரதியார், பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை, சிவக்கவிமணி சி. கே. சுப்பிர மணிய முதலியார், ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார், பேராசிரியர் கோ. சுப்பிரமணிய பிள்ளை, கோவை கிழார் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், டாக்டர் தெ. பொ. மீனுட்சி சுந்தர னுர் போன்றோர் அவ் வரிசையில் அடங்குவர். இவர்கள் அணி யில் இடம்பெற்ற சென்னை உயர்நீதி மன்ற நடுவராக இருந்து ஓய்வு பெற்றவரும் இலக்கியப் பேரறிஞராகத் திகழ்ந்தவரும் ஆகிய டாக்டர் எஸ். மகராசன் அவர்கள் 9—9—82 அன்று திடுமென உயிர் நீத்தமை தமிழகத்துக்கும் சைவசமயத்திற்கும் பேரிழப்பாகும்.

தமிழ்க் கவிதைகளும் குறிப்பாகக் கம்பராமாயணமும் படித்த புலவர்களிடையே மட்டுமே பயின்றுவந்த காலத்தில் அவற்றை எளிய மக்களும் சுவைத்துப் படிக்கும் வண்ணம் மாற்றிய பெருமை ரசிகமணி டி. கே. சி அவர்களைச் சாரும். நாள், வார, மாத இதழ்களைப் படிப்பது போன்ற வேகத்தில் தமிழ்க் கவிதையைப் புலவர்கள் படித்து வந்த காலத்தில் நாட்கணக்காக, வாரக் கணக் காக, மாதக் கணக்காகப் படித்த கவிதைகளையே திரும்பத் திரும்பப் படித்து, பாடி, சுவைத்து, பொருளுணர்ந்து, அதைப் பிறருக்கு விளக்கி மகிழும் கலையைப் பெற்றிருந்த டி. கே. சி. அவர்கள் அதை மகராசன் அவர்களிடம் விட்டுச் சென்றுர்.

'ஒருவனுக்குக் கை நிறைய வைரங்கள் கிடைத்தன. அவைகளை வைக்கப் பெட்டகமில்லை. திடீரென்று அரிய பெட்டகம் கிடைத்துவிட்டால் அவனுக்கு எவ்வளவு ஆறுதலாய் இருக்கும்! அதேபோல் நானும் தமிழில் அரிய அற்புதமான பாடல்களைக் கண் டேன். கை நிறையவே இருக்கின்றன. வைக்க இடமில்லாமல் திண்டாடினேன். தாங்களும் வேலம்மாளும் ஒப்படைப்பதற்கு இருக்கிறீர்கள். எனக்கு எவ்வளவு ஆறுதல் என்று சொல்வா

னேன்' என்று டி. கே. சி. மகராசன் அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டதைப் போல் டி. கே. சிக்குக் கிடைத்த அரிய பெட்டகங்களாய் மகராசனும் அவர்களுடைய தமக்கையார் வேலம்மாளும் திகழ்ந்தார்கள்.

டி. கே. சி. என்ற பேரருவியில் குளித்துக் குளித்துத் தம் உள்ளத்தையும் ஆன்மாவையும் மகராசன் தூய்மை ஆக்கிக்கொண்டார். டி. கே. சி.யின் தத்துப் பிள்ளையாக அவர் திகழ்ந்தார். இதை டி. கே. சி. அவர்களே திவான்பகதூர் ஆவுடையப்பபிள்ளையிடம் ஒருமுறை பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: "நமது தமிழ்க் கவிதை பண்பாடு சமயம் எல்லாவற்றையும் மகராசனுக்கு உயில் எழுதி வைத்துவிட்டேன். இனிக் கவலையில்லை."

மகராசன் தமிழ்க் கவிதையை ஊன்றிப் படித்தார். அதன் இனிமையை நுகர்ந்து வந்தார். பிறருக்கு அருமையாக எடுத்தும் சொன்னார். 'சென்ற ஐம்பதாண்டுகட்கு மேற்பட்ட காலமாக எனக்கு ஆர்வத்தையும் இன்பத்தையும் அமைதியையும் ஊட்டி வருவது கவிதை. குருதி அழுத்தம் எனக்கு அதிகமாக இருக்கும் போதெல்லாம் ஒரு தமிழ்ப் பாடலைத் தன்னை மறந்து பாடுவேன். உடனே குருதி அழுத்தத்தின் கொடுங்கோன்மையினின்று விடுபடுவேன்.' இது மகராசன் கூற்று.

இனி அவர் தாம் நுகர்ந்த கவிதையின்பத்தைப் பிறருக்கு எப்படி வாரி வழங்கினர் என்பதை டி. கே சி.யின் வாக்கால் உணரலாம். "மகராசன் தோற்றம் எல்லாருடைய உள்ளத்தையும் கவர்ந்துவிட்டது. அன்பு, பரிவு, பொறுப்புணர்ச்சி எல்லாம் அழகாகக் கலந்து வந்தன பேச்சில். அந்த வகையில் உள்ளத்தைத் திறந்து பேசுவது யாருக்கும் இயலாது. வீரத் தொனியோடும் அன்பின் இளகிய தொனியோடும் நயமாய் உள்ளத்திலிருந்து புறப்பட்டு வந்தது சொல். உள்ளத்தில் உண்டான உண்மையான உணர்ச்சியை உலகத்துக்கே எடுத்துச் சொன்னது போல் இருந்தது." ஆண்டாள் பாசுரத்தை மகராசன் இதய உணர்ச்சியோடு திளைத்துப் பேசும் பேச்சுக்காக வடகோடி துருவத்திற்கே போகலாமே என்று படும் என்கிறார் டி. கே. சி. இவ்வாறு ரசிகமணியே பாராட்டிய ரசிகமணியாக வாழ்ந்தவர் மகராசன்.

குட்டையும் நெட்டையும் அல்லாத நடுத்தரமான உயரம். சற்றே பருத்த உருவம்; முத்துப்பல் சிறிது வெளித்தோன்ற சிரித்த முகத்தோற்றம்; இடுப்பில் சரிகை வேட்டி; அதன் மேல் வெண்பட்டுச் சட்டை; மேலே அவருக்கே யுரித்தான தனித்த

அடையாளமான சரிகை மேலாடை; நெல்லை மக்கள் குறிப்பது போல் வல்லாட்டாக அதை அணிந்த பாங்கு; நெற்றியில் என்றும் குங்குமப் பொட்டு; பிறரிடம் நல்லதை மட்டுமே கண்டு சுவைத்த பேராண்மை; கவிதையை மனம்விட்டுப் பாராட்டிய பரந்த மனம்; சூழவும் நண்பர்களை அமர்த்தி வைத்துக்கொண்டு மணிக்கணக்காக மனம்விட்டுப் பேசி வாய்விட்டுச் சிரித்துக் கலந்துரையாடலைக் கையாண்ட திறம்; மனதில் பட்டதை மறைக்காமல் பட்டென எடுத்துரைக்கும் இயல்பு இத்தனையும் மொத்தமாக ஓருருக் கொண்டிருந்தவர் மகராசன்.

நீதித் துறையில் பணியாற்றிக்கொண்டு தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டாற்றி வந்த மகராசன் பிறந்தநாள் ஏப்ரல் 1, 1913. பள்ளித் தொடக்கப் படிப்பை மதுரை சேதுபதி பள்ளியிலும், கல்லூரித் தொடக்கநிலைப் படிப்பை நெல்லை தூய சவேரியர் கல்லூரியிலும் பெற்ற மகராசன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி. எசி பட்டப் படிப்பினைப் பெற்றார். சென்னைச் சட்டக் கல்லூரியில் சட்டம் பயின்றபின் தமிழ்நாடு நீதித்துறையில் சேர்ந்தார். தூத்துக்குடி, சீவில்லிபுத்தூர் போன்ற தமிழ்நாட்டின் பல ஊர்களில் நீதிமன்றங்களில் நடுவராகப் பணியாற்றியுள்ளார்.

சென்னை உயர்நீதி மன்றத்தின் நடுவர் பொறுப்பை ஏற்பதற்கு முன் புதுவை மாநிலத் தலைமை நீதிபதியாக நான்கு ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். சென்னையில் ஆறாண்டுகள் நீதிபதியாகப் பணியாற்றியபின் ஓய்வு பெற்றார்.

அதன் பின்னும் அவருடைய தமிழ் மொழிபெயர்ப்புத் திறன் கண்டு போற்றும் வகையில் மைய, மாநில அரசுச் சட்டங்களைத் தமிழில் மொழிபெயர்க்க ஆட்சி மொழிச் சட்டக்குழுவின் தலைவர் பொறுப்பைத் தமிழக அரசு ஒப்படைத்தது. பலவேறு சட்டங்களைத் தமிழாக்கம் செய்தபின் உடல் நலங்குன்றியதன் காரணமாக அப் பொறுப்பினின்று மகராசன் விலகிக்கொண்டார். தமிழக அரசு அமைத்துள்ள இலக்கிய மொழி பெயர்ப்புக் குழுவின் தலைவராகத் திகழ்ந்து சில நூல்களை வெளியிட்டார்.

சேக்ஸ்பியரின் நாடகங்களில் ஈடுபாடு கொண்ட மகராசன் ஹாம்லெட், கிங் லீயர், மாக்பெத் ஆகிய நாடகங்களைத் தமிழாக்கம் செய்துள்ளார். அவ்வப்போது அவர் பல்வேறு இதழ்களுக்கு எழுதிய கட்டுரைகள் ஒலிச் செல்வம், சொல்லின்பம், கவிதையில் விடுமுறை என்ற தலைப்புகளில் நூல்களாக வெளிவந்துள்ளன.

மகராசன் அவர்களுடைய ஈடுபாடு முழுவதும் கம்பன், திருவள்ளுவர், திருமூலர் ஆகியோரின் படைப்புகளில்தான். கம்பனைப்பற்றியும் திருவள்ளுவரைப்பற்றியும் ஆங்கிலத்தில் சாகித்திய அகாதெமி வழியாக இரு நூல்களை இயற்றி அவர் வெளியிட்டுள்ளார்.

கம்பன் பாடல்களில் மூவாயிரம் பாடல்களை அவர் மொழி பெயர்த்துள்ளதாகக் குறிப்புக் கிடைக்கின்றது. வாழ்நாளிறுதிக் காலத்தில் அமெரிக்கச் சைவசித்தாந்த மடத்தின் தலைவராய சுவாமி சுப்பிரமண்யாவின் தூண்டுதலின் பேரில் திருமந்திரத்தை ஆங்கில ஆக்கம் செய்துவந்தார். நோய் கடுமையானதின் காரணமாக அப் பணியை முற்றுவிக்காமல் விட்டுச் சென்றூர்.

அவருக்குத் திருமந்திரத்திலிருந்த ஈடுபாட்டைக் கண்டு டி. கே. சி. வியந்திருக்கிருர். "திருமூலரோடு நன்ருய்த் திளைத்து அவரோடு ஒட்டிவிட்டீர்கள். திருமூலருக்கு இதுவரை யாரும் இத்தகைய விளக்கம் தரவில்லை. உண்மை அவருடைய இதயத்தில் எவ்வளவு ஆழத்தில் கருத்துக் குவியல் கிடக்கிறது என்று தெரிந்து பாதாளக் குறண்டி கொண்டு வெளியே எடுத்து வைக்கிறீர்கள். வெள்ளிப் பாத்திரமும் தங்கப் பத்திரமுமாக இருக்கிறது. திருமூலருக்கும் தமிழுக்கும் வெகு நல்ல சேவை!"

மகராசனுடைய எழுத்தாற்றலைப்பற்றியும் டி. கே. சி. குறிப் பிடுகிருர். "தங்கள் கடிதத்தில் தனிநடை (ஸ்டைல்) தெரிகிறது. தமிழும் அதன் கும்மாளமும் தங்களைக் காட்டுகின்றன. கருத்தும் சொல்லும் இயல்பாகக் கலந்து கைகோத்து நடக்கின்றன. தனிப்பட்ட கவர்ச்சி நடை (ஸ்டைல்) இருக்க வேண்டுமென்ருல் வார்த்தைகள் இருந்தால் போதாது. உள்ளத்தில் உயிர்—அதாவது உண்மை உணர்ச்சியிருக்க வேண்டும்." இவ்வாறு கருத்தும் சொல்லும் கைகோத்து நடக்கும் எழுத்து நடையைப் பெற்றிருந்த மகராசன் தமிழ், ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய மொழி களில் புலமை பெற்றிருந்தார்.

இதுவரை நடைபெற்ற ஐந்து உலகத்தமிழ் மாநாடுகளில் இலங்கை மாநாட்டைத் தவிர எஞ்சிய நான்கு மாநாடுகளிலும் கலந்துகொண்டு ஆய்வுக் கட்டுரைகள் படித்துள்ளார். அண்மை யில் நடைபெற்ற மதுரை மாநாட்டில் கருத்தரங்கப் பகுதியை நடத்தும் முழுப் பொறுப்பையும் குழுவின் தலைவராக இருந்து செம்மையாகச் செய்து முடித்தார். இதுவரை நடந்த மாநாடு களில் இதுவே பெரிய மாநாடாகும்.

அவருடைய இலக்கியப் புலமையையும் எழுத்துப் பணியையும் பாராட்டி அண்ணமலைப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' பட்டம் கொடுத்துச் சிறப்பித்துள்ளது.

அவர் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின்னும் தம் பெயர் முன்னர் 'ஜஸ்டிஸ்' என்ற பட்டத்தைச் சேர்த்தே எழுதுவார். 'ஓய்வு பெற்று விட்டீர்களே இப்படிச் சேர்க்கலாமா' என்று சிலர் கேட்டதற்குத் தமக்கேயுரிய பாணியில் சிரித்துக்கொண்டே, 'Judge Maharajan may retire, but Justice never retires' என்று கூறுவார்கள். மகராசன் தம் நீதிபதிப் பொறுப்பிலிருந்து விலகலாம். ஆனல் நியாயம் வழங்கும் பண்பு அவரிடமிருந்து என்றும் விலகக் கூடாது என்பார். அவ்வாறே நீதிபதி மகராசன் நம்மிடமிருந்து மறையலாம். ஆனல் அவர் படைத்த எழுத்தோவியங்களும் அவர் ஆற்றிய சொற்பொழிவுகளும் எல்லாவற்றுக்கும் மேலாக அவருடைய நெடிதுயர்ந்த தோற்றமும், சிரித்த முகமும் நம் மனக்கண்ணை விட்டு என்றென்றும் மறையா.

'சாவு மனிதனுடைய பிறப்புரிமை' என்று பெல்ஜிய தத்துவ ஞானியான மாரிஸ் மெய்ட்டர் லிங்கை மேற்கோள் காட்டி, 'கை நிறைய வாழ்க்கையை அள்ளிச் சாவுக் கடலில் வீசுகிருன் கால தேவன். வாழ்க்கை கரைந்து விரிந்து பரிபூரணத்தையடைகிறது. இதைக் கண்டு கண்ணீர் வடிப்பானேன்' என்று கேட்டுள்ளார் மகராசன். இருப்பினும் அவருடைய பிரிவை எண்ணும்போது நம்மையறியாமலே நம் கண்கள் குளமாகின்றன. வாழ்க அவர் புகழ்.

———

## 'செல்வி' கட்டுரையாளர்கட்கு

தாள் விலை ஏற்றம் காரணமாக 'செல்வி'யில் அதிக பக்கங்கள் வெளியிட இயலவில்லை. எனவே, கட்டுரை எழுதும் அன்பர்கள் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் வகையில் செல்வியில் 4 அல்லது 5 பக்கங்கட்கு மேற்படாமல் கட்டுரைகளை எழுதியனுப்புவதோடு கூடுமானவரையில் நீண்ட தொடர் கட்டுரைகளைத் தவிர்க்குமாறும் கேட்டுக் கொள்கிறோம்.

ஆசிரியர்.

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப்பிள்ளை
மகாகவி பாரதி நகர், சென்னை-600 039.]

## 10. LETTER HEAD

ஊர்பேரில்லாக் கடிதங்கள் உவப்பூட்டும் கடிதங்களாக அமைந்துவிடுகின்றன! ஏனென்றால் உண்மைக்குப் புறம்பான செய்திகளை அள்ளித்தரும் அரிய கருவிகளாக அவை பணியாற்றுகின்றன! நல்லவர்களைக்கூட நடுத்தெருவிற்கு விரட்டிவிடுகின்ற வாய்ப்புடைய இக் கடிதங்களை மறந்து, நல்ல கடிதங்களை நாம் நாடுவோமாக.

நண்பர் ஒருவர் நற்சான்றிதழ் ஒன்றினை நாடி என் இல்லத்திற்கு வந்தார். ஓய்வு பெற்ற அலுவலர்களின் உயர்ந்த நிலைகளையெல்லாம் அவர் உணரவில்லை போலும் என்று நான் நினைத்தேன்! முத்திரையில்லா மாந்தர்கள்தாமே ஓய்வு பெற்றவர்கள்? ஆம். அலுவலகத்தில் பயன்படுத்தப்பெறும் தேதி முத்திரையைத்தான் நான் குறிப்பிடுகின்றேன்!

“பொறுப்புடைய ஒருவரிடமிருந்து நற்சான்று ஒன்று பெறுதல் வேண்டும். ஆகவே அதனைத் தாங்கள் தருவது தகுதியேயாகும்'' என்று விளக்கினர் நண்பர்! இசைவு தெரிவித்துத், தாள் ஒன்றைத் தேடினேன். “தங்கள் Letter head-ல் தருமாறு வேண்டுகின்றேன்'' என்று சொல்லி முடித்தார் நண்பர்.

Letter head. ஆம். இதற்குப் பொதுமக்கள் உலகில் இதுவரை மொழிபெயர்ப்பு எதுவும் புழங்குவதாகத் தெரியவில்லை. அச்சகத்தாரும் பிறரும் ஆர்வம் சிறிதும் குன்றாமல் Letter head என்றே சொல்லி வருகின்றார்கள்!

Letter என்னும் சொல்லிற்கு நேரிணையாகப் பழந்தமிழில் பல அரிய சொற்கள் நமக்குக் கிடைக்கின்றன. மடல், மடங்கல், முடங்கல்—இவை தித்திக்கும் தேனூறும் சொற்களாகும். தனி இதழை மடல் என்கிறோம். மடிக்கப்படுவது மடங்கல் ஆகின்றது. சுருள் ஓலைக் கடிதம் முடங்கல் என்றாயிற்று. இந்தச் சொற்கள் எத்தனையோ நிலைகளுக்குத் தேவைப்படும் தீந்தமிழ்ச் சொற்களாக இருந்து வருகின்றன.

இன்று பரவலாகப் பழகிவரும் ''கடிதம்'' என்னும் சொல்லையும் நாம் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும். தெரிவிக்க வேண்டிய ஒரு செய்தி, தெரிவிக்கப்பட வேண்டிய ஒருவருக்கு, விரைவாகச் சென்று சேரவேண்டும் என்பது நம் விருப்பமாகும். அஃதாவது கடிதாகச் சென்று சேர வேண்டும் என்பது நம் அவா

வாகும். ஆகவே அப் பணியினை ஆற்றும் கருவியைக் கடிதம் என்று போற்றுகின்றோம்.

கடிதம் எழுதுவதற்குப் பொருத்தமான அளவுடைய தாளை Letter Paper என்று குறிக்கின்றோம். எல்லாவற்றிற்கும் அடிப் படையாக அமைவது இந்தத் "தாள்"தான் என்று சொல்லுதல் வேண்டும். அறிவுலகத்தின் கூர்மைமிக்க கருவி இந்தத் தாளாகும் வாள் செய்துவந்த வேலையை இப்போது தாள் செய்து வருகின்றது! அன்பை வெளிப்படுத்தவும் தாள் பயன் படுகின்றது. அச்சத்தை ஊட்டவும் அதுவே பயன்படுகின்றது. கடிதம் எழுதப் பயன்படும் தாள், அஃதாவது கடிதத் தாள், Letter paper என்னும் பெயரைப் பெறுகின்றது. இதனை "மடலேடு" என்று குறிக்கினும், அதுவும் அழகுறப் பொருந்து வதேயாகும்.

Letter Paper என்று எண்ணியவுடனேயே Letter head என்னும் பெயரையும் நினைக்கின்றோம். Letter head என்பது Letter heading என்பதன் சுருக்கமேயாகும்.

"வேலைத் தலைப்பில் நின்றுகொண்டு நாமும் வேலை செய்யா மல் சும்மா இருக்க முடியுமா" என்று என் தந்தையார் சொல் வதை நான் சிறு பருவத்தில் கேட்டிருக்கின்றேன். "வேலைத் தலைப்பு" என்றால் Work—Spot என்பதை இன்றுதான் உணர்ந்து கொண்டேன்! நல்ல தமிழ்ச் சொற்கள் நாட்டுப் புறங்களில் கிடைக்கும் உண்மையை இதன்மூலம் தெரிந்து கொள்ளலாம். "தலைப்பு" என்னும் சொல் தக்க தறுவாய்களி லெல்லாம் கைகொடுத்து உதவும் தலைமைச் சொல்லாகத் திகழ்ந்து வருகின்றது.

Letter head என்பதற்கு ஆங்கில அகராதிகள் தெளிவான விளக்கங்களைத் தெரிவிக்கின்றன. பெயர், பட்டம், பணி, முகவரி முதலான எல்லாச் செய்திகளையும் தலைப்பில் கொண்டு திகழும் தாள்தான் Letter head ஆகும். தலைப்பினையுடைய தாள் தலைப் புத்தாள் ஆகும். எனவே தடையில்லாத் தமிழாக்கம் "கடிதத் தலைப்புத் தாள்" என்பதேயாகும். இது நீளமாக உள்ளதே என்னும் ஒரு தடை மட்டும் தலைகாட்டக் கூடும். காலம் கனிந்து வரும்போது, நீளம் குன்றிப் போகும். "தலைப்புத்தாள்" என்று சுருக்கம் பெற்றால், ஆங்கிலத்தோடு அது நெருக்கம் பெற்று விடுமன்றோ?

Letter paper = கடிதத் தாள்.

Letter head = கடிதத் தலைப்புத்தாள் = தலைப்புத்தாள்.

———

# மகராசன் மறையவில்லை!

[பி. வி. கிரி. நிருபர்: 'தமிழரசு']

மகராசன்!

ஆம். பெயருக்கேற்றாற் போலவே மகராசனாக வாழ்ந்தவர். மாத்தமிழுக்கு மகத்தான பலதொண்டுகளைச் செய்தவர்.

மங்காத, மறையாத புன்னகை தவழும் முகத்தினராய்—மழலை போன்று இன் சொற்களையே பேசுகின்ற தன்மையராய்—மாற்றாரும் மயங்குகின்ற தோற்றமுடையவராய் நம்மிடையே வாழ்ந்தவர்.

எதையும் ஆய்ந்தறிந்தே செய்பவர்; தன்னந்தனியராய் அவர் எந்த முடிவுக்கும் வந்ததில்லை. ஆட்சிமொழி ஆணையத் தலைவராய் இருந்த காலத்தில், ஒரு சொல்லைத் தேர்ந்தெடுக்கும் போதும் சரி, ஒரு மொழிபெயர்ப்பைச் செய்கின்ற போதும் சரி, அவர் தம்முடன் பணியாற்றும் உற்ற நண்பர்களை, உறுப்பினர் களைக் கலந்துதான் செய்வார்கள். எதையும் மேற்போக்காக, எடுத்தேன் கவிழ்த்தேன் என்று விரைந்து செய்யமாட்டார்கள்.

தமிழன்னையின் தவப்புதல்வரான அவர், தமிழ்க் கடலில் ஆழ்ந்து முத்தெடுக்கவே விரும்புவார். அவருடைய தமிழ்ப்பணி எல்லாமே, தமிழ்க் கடல் தருகின்ற தரமான முத்துகளாகவே விளங்கும். அவர் எப்போதுமே கலங்கியதில்லை; தமிழ் எதிரி களைக் கலக்கியதாக அறிந்திருக்கிறேன்; அக மகிழ்ந்திருக் கிறேன்.

சொல் வேறு, செயல் வேறாய்க் காட்சி தரும் இக் காலச் சூழலில், சொல்லையும், செயலையும் இரு கண்களாய் மதித்து வாழ்ந்தவர். இருபதாம் நூற்றாண்டில் அவருடன் வாழ நாம் கொடுத்து வைத்தவர்கள். ஆனால், காலன் அவருடன் வாழ விழைந்து அவரைப் பறித்துக்கொண்டான் போலும்!

''காமிராவில் எல்லாம் சிறந்த காமிரா அன்பு நிறைந்த இதயந்தான்'' என்று ரசிகமணி டி. கே. சி. அவர்கள் ஒரு கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். அந்தப் பொன் வரிகளுக்குப் பொருத்தமாகத் திகழ்ந்தவர் நீதிபதி மகராசன் அவர்கள். ஆம், ஒருவரைப் பார்த்த அளவிலேயே, அவரை அப்படியே படம்

பிடித்து விடுவார் அவர். அவருடன் நான் ஒரு சில ஆண்டுகளே பழகியிருக்கிறேன். என்றாலும், பல்லாண்டுகள் பழகியது போன்ற நினைவுநிலை எனக்கு! அவரது இனிய தன்மை என் இதயத்துக்கு நிறைவு தருவதாக இருந்ததே அதற்குக் காரணம் என்று சொல்லலாம்.

ஒரு நாள், அவர்கள் எனக்கு ஒரு சான்றிதழ் தந்தார்கள். அழகிய ஆங்கிலத்திலே வரையப்பட்ட ஓவியம் என்றே அதைச் சொல்ல வேண்டும். ஆம். அதில் என் இயல்பை அப்படியே படம் பிடித்துக்காட்டியிருந்தார்—ஆட்சி மொழி ஆணைய நண்பர்கள் அப்படித்தான் சொல்லி அக மகிழ்ந்தார்கள். இன்றும் அச் சான்றிதழைக் கிடைத்தற்கரிய சிறந்த பொருளாக மதித்துப் போற்றி வருகிறேன்.

ஒரு திங்களிதழின் செய்தியாளர் என்ற முறையில் நான் ஒரு முறை அவரைக் கண்டிருக்கிறேன். அவர் நடத்திய செய்தியாளர்கள் கூட்டத்திலும் கலந்துகொண்டிருக்கிறேன். அப்போதெல்லாம், அவரது இனிய தமிழை, நகைச்சுவை கலந்த நற்றமிழைச் செவியாரக் கேட்டு மகிழ்ந்திருக்கிறேன். செய்தியாளர்கள் கேட்கும் வினாக்களுக்கெல்லாம், அவர் மிகுந்த திறமையும் சுவையுமுள்ள விடையளிப்பது கண்டு வியந்திருக்கிறேன். அந்த விடைகளில், நகைச் சுவை நறுக்குகள் மிகக் கலந்து விளங்கும். அவருடைய கருத்துரைகள் வினாவெழுப்பும் செய்தியாளரையே வயிறு நோகச் சிரிக்க வைத்திருப்பதையும் கண்டிருக்கிறேன்.

நீதிபதி மகராசன் அவர்கள், டாக்டர் பட்டம் பெறுகின்ற காட்சியை நேரில் காணும் வாய்ப்புப் பெற்றவர்களுள் யானும் ஒருவன்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பொன் விழாபற்றிய செய்திகளைத் திரட்டச் சென்றிருந்த நான், அக் காட்சியைக் கண்ணாரக் கண்டு களித்தேன். அவ்வமயம், நீதிபதி மகராசன் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவைப் பல்லாயிரக்கணக்கானவர் கேட்டு மகிழ்ந்தார்கள். சுருங்கச் சொன்னால், அவரது பேச்சின் போது பெரும்பான்மை நேரமும் கரவொலி தொடர்ந்தது என்றே சொல்ல வேண்டும். அவ்வளவு அருமையாக, இனிமையாக இருந்தது அந்த அரிய சொற்பொழிவு.

மறு நாள் சென்னைக்குத் திரும்பும் போது, தொடர் வண்டி நிலையத்திற்கு வந்து வழியனுப்பியவர்களோடு யானும் இருந்தேன். என்னை நோக்கி அவர்கள், "பேச்சைக் கேட்டீர்களா?

எப்படி இருந்தது?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டார்கள். அவையெல்லாம் இன்றுங்கூட என் நெஞ்சில் பசுமையாக இருக்கின்றன.

நடமாடும் திருவுருவமாய்க் காட்சியளித்த அவர்கள் இன்று திருவுருவப் படமாகக் காட்சியளிக்கின்ருர்கள். அந்தப் படம் வெறும் படமன்று; பாடம்! ஆம். அதுதான் இன் சொல்... இன் சொல்... இன் சொல்!

நீதிபதி மகராசன் அவர்கள் அறிவாற்றல் மிக்க வியத்தகு மனிதர். அவர் மறையவில்லை; நம் மனத்திலே வாழ்கின்ருர்!

---

## ஒதுக்கப்பட்டால்...

[பேராசிரியர் மா. பா. குருசாமி, எம். ஏ., எம். லிட்.]

வானுயரக் கோபுரங்கள் கட்டி; என்றும்
வளர்கலைகள் குடியிருக்கக் கோயில் செய்தோம்;
கோனுயரக் குடிவாழ்ந்த காலந் தொட்டு
குவித்திட்டோம் அணிமணிகள் தெய்வம் பூண,
தானுயரத் தரவேண்டும் 'தர்மம்' என்ருர்
தயங்காமல் கோயிலுக்குக் கொடைகள் தந்தோம்
வானுயர்ந்த கோயிலிலே வழங்கு கின்ற
மந்திரத்தின் பொருளறியாச் சிலைகள் ஆனேம்! 1

தாய்மொழியாம் தமிழினிலே 'போற்றி' சொன்னல்
தலைகீழாய்ச் சமயமது போகு மென்பார்;
"வாய்நுழையா வடமொழிதான் ஓத வேண்டும்
வல்லவனும் அதைத்தானே கேட்பான்'' என்பார்;
பாய்கின்ற மொழிஎல்லாம் இறைவ னுக்குப்
பன்னீராய் இருக்காதா? பயிற்சி தந்தா
வாய்மொழியை இறைவனுக்கே உணர்த்த வேண்டும்?
வழக்கமெனக் கூறுவதும் சரியா சொல்வீர்? 2

தமிழ்நாட்டுக் கோயில்களில் தமிழைக் காணேம்,
தமிழர்களின் ஆட்சியிலும் மாற்ற மில்லை
அமிழ்தான நமதுமொழி ஆகா தென்று
அஞ்சாமல் கூறுபவர் இருக்கின் ருரே,
தமிழ்மொழியைத் தெய்வமணம் கமழச் செய்த
நாயன்மார் ஆழ்வார்கள் பிறந்த நாட்டில்
தமிழ்இனியும் கோயில்களில் ஒதுக்கப் பட்டால்
தமிழ்நெஞ்சம் பொறுக்காது பொங்கக் காண்போம்! 3

---

## நல்லாசிரியர் விருது பெற்ற
# புலவர் பொதிகைச் செல்வன், பவானி

[எழுதியவர் : பேராசிரியர் மு. சதாசிவம்]

இவ்வாண்டில் (5—9—82-இல்) தமிழக அரசின் மாநில நல்லாசிரியர் விருதுபெற்ற புலவர் திருமிகு வா. பழனிச்சாமி அவர்கள் பவானி அரசினர் ஆண்கள் மேனிலைப் பள்ளியில் முதல்நிலைத் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகின்றார். இவர் "புலவர் பொதிகைச் செல்வன்" என்னும் புனைபெயருடையவர்.



இவர் இராவண காவியம் பாடிய பெரும்புலவர் குழந்தை அவர்களிடம் பல்லாண்டுகள் இலக்கண இலக்கியங்களைப் பயின்று, புலவர் பட்டம் பெற்று (1959) உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் ஆனார்.

இயற்கவித் திறன் படைத்த இவர் மிக இளம் பருவத்திலிருந்தே சிறந்த கவிதைகளை இயற்றும் திறன் படைத்தவர். இவர்தம் கவிதைகள் செந்தமிழ்ச் செல்வி, தென்மொழி, சுரதா, ஜனசக்தி, செங்கோல், குறளியம், நித்திலக் குவியல், தோகை, பூங்கோதை முதலிய பல இதழ்களில் வெளிவந்துள்ளன.

பாவேந்தர் பாரதிதாசனார் போன்ற கவிஞர் பெருமக்களுடன் நெருங்கிப் பழகி, அவர்களின் பாராட்டுகளையும், வாழ்த்தையும் பெற்றவர். தமிழ் இலக்கண இலக்கியங்களில் நல்ல பயிற்சி உடையவர்.

சென்ற 35 ஆண்டுகளாகத் தமிழகம் முழுவதும் சென்று நூற்றுக்கணக்கான பட்டிமன்றங்கள், வழக்காடு மன்றங்கள், கருத்தரங்குகள், சிறப்புச் சொற்பொழிவுகள் ஆகியவற்றில் பங்கு கொண்டவர். குறள்நெறி வளர்ச்சிக்கும், தமிழ்க் கவிதை வளர்ச்சிக்கும் சிறந்த தொண்டுகள் ஆற்றி வருகின்றார்.

மேலும் சைவசித்தாந்த நெறிபோற்றும் இவர் திருமுறை நூல்களில் மிகுந்த மதிப்பும் ஈடுபாடும் கொண்டவர். சிறப்பாகத் திருவாசகத்திலும் திருவருட்பாவிலும் மிகுந்த பயிற்சியும், எடுத்தியம்பும் ஆற்றலும் பெற்றவர்.

இவர் கழகத்திடத்தும், கழக ஆட்சியர் அவர்களிடத்தும் மிகுந்த அன்பும், பற்றும், மதிப்பும் உடையவர். கழகத்தையும், செந்தமிழ்ச் செல்வியையும், கழக ஆட்சியர் அவர்களையும் பாராட்டிப் பல பாடல்கள் பாடியுள்ளார்.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## அறிவர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கட்குப் பாராட்டு விழா

தமிழ்நாடு இறையியல் கல்லூரிப் பேராசிரியரும், நம் செந்தமிழ்ச் செல்வி இதழாசிரியர் குழுவுள் ஒருவருமான அறிவர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கள், ''பண்டைத் தமிழ் இலக்கியங்களில் இசை இலக்கணம்'' என்பதுபற்றி ஆய்வுரை எழுதி மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தின் 'அறிவர்' பட்டம் (Ph D.) பெற்றமையைக் குறித்து 12—9—82 அன்று மாலை, தமிழ்நாடு இறையியல் கல்லூரியில், இறையியல் கல்வித் துறை இயக்குநர் அறிவர் சாமுவேல் அமிர்தம் அவர்கள் தலைமையில் பாராட்டு விழா நடைபெற்றது. இறையியல் கல்லூரி முதல்வர் அறிவர் ஞான இராபின்சன், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் அறிவர் தமிழண்ணல் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். அறிவர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கட்கு எமது வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறேம்.

## ரசிகமணி டி. கே. சி. அவர்களின் நூற்ருண்டு விழா

தமிழ்நாட்டரசின் சார்பில் ரசிகமணி டி. கே. சி. அவர்களின் நூற்ருண்டு நிறைவு விழா 29—9—82 அன்று சென்னை கலைவாணர் அரங்கில் மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினர். அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் டி. கே. சி. அவர்களின் படத்தினைத் திறந்து வைத்து விழா நிறைவுரை ஆற்றினர். பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம், திரு. மீ ப. சோமசுந்தரம் (சோமு), திருமதி இராஜேஸ்வரி நடராசன், செங்கோட்டை சனர்த்தனன், டாக்டர் சு. பாலச்சந்திரன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௭, ௪0ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. | 10—00 |
| ,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | | 5—00 |
| ,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | | 5—00 |
| ,, இரா. சுந்தரம் பிள்ளை அவர்கள், சென்னை | | 10—00 |
| ,, பேரா. சோ. கலைவாணி, பராசக்தி கல்லூரி குற்றாலம் | | 25—00 |

———

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

### கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| அம்பிகாபதி காதல் காப்பியம் —பேராசிரியர் சுந்தரசண்முகனார் | 15 | 00 |
| பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள் —டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் | 8 | 00 |
| தொல்காப்பியம் உரைவளம்—ஆ. சிவலிங்கனார் | 20 | 00 |
| சுவடியில் பயிற்சிக் கையேடு—மு. கோ. ராமன் | 6 | 00 |
| நீ வந்த நேரம்—ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன் | 10 | 00 |
| கவிச் சக்கரவர்த்தியும் கவியரசரும்—மு. மு. இஸ்மாயில் | 12 | 50 |
| வரைகடந்த தியானம்—டாக்டர். மொ. சு. துரைசாமி | 5 | 20 |
| மன அமைதிதரும் நித்ய பாராயணங்கள் —அருளரசி ஹாட்கி வாலம் | 11 | 00 |
| கல்லறைகள்—ஐசக் அருமைராஜன் | | |
| உபநிஷதங்களின் சாரம் —புண்ணியகோடி ஸ்ரீ நடராஜ சிவாச்சாரியார் | 6 | 00 |
| தெய்வக் குழந்தைகள்—நாஞ்சில் கிருஷ்ணப்பிரியன் எம் ஏ. | 6 | 75 |
| கட்டுரைக் கனிகள்—மது. ச. விமலானந்தம் | 6 | 75 |
| கறுப்பு சிவப்பு வெளுப்பு—கருணைதாசன் | 10 | 00 |
| உயர் பண்புக் கதைகள்—கவியழகன், எம்.ஏ. | 5 | 00 |
| கண்ணன் பிறந்தான்—நாஞ்சில் கிருஷ்ணப்பிரியன், எம்.ஏ | 5 | 75 |
| பர்னசாலை மான்கள்—சேவற்கொடியோன்-ரோகிணி | 7 | 00 |
| நீலவல்லி—சாண்டில்யன் | 6 | 00 |
| எங்கெங்கு காணினும்—டாக்டர் மா. இராமலிங்கம் | 10 | 50 |
| குறளும் பொருளும்—இறையரசன் | 12 | 50 |
| விசாரணைகள்—இளையபாரதி | 6 | 00 |
| விஞ்ஞான விநோதங்கள்—வசந்தா இராமநாதன் | 6 | 00 |
| நோய்தீர்க்கும் உணவு முறைகள்—இரத்தின சண்முகனார் | 10 | 00 |
| The Art of Biography—D. Anjaneyalu | 2 | 00 |
| Learning King's English—I D. Asirvatham | 4 | 50 |

### திருத்திப் புதுப்பிக்கப் பெற்ற கழக அகராதி நூல்கள்

| | | |
|---|---|---|
| கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி —பன்மொழிப் புலவர் கா அப்பாத்துரையார் எம்.ஏ., எல்.டி. | 15 | 00 |
| கழகத் தமிழ்க் கையகராதி —சேலை சகதேவ முதலியார் —காழி சிவ. கண்ணுசாமிப் பிள்ளை | 10 | 00 |
| கழகத் தமிழ்—தமிழ் அகராதி—சு. அ இராமசாமிப் புவவர் | 60 | 00 |